# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-சக] வள்ளுவர் ஆண்டு உ௦௦ரு, கார்த்திகை (Dec. '74)[பரல்-ச

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௪௯ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦டு, கார்த்திகை திசம்பர் 1974 | பரல் ௪ |
|---|---|---|

# நூற்பதிப்பகங்கள் மடிவதேன்?

தமிழில் அச்சு எழுத்துக்கள் வருமுன்பு நூல்களெல்லாம் ஓலைகளிலேயே எழுதப் பெற்றன. ஆசிரியர்கள் தம் கைப்படவும் எழுதினர், சொல்லியும் எழுதச் செய்தனர். படி எடுப்பவர்களைக் கொண்டு ஒரு நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட படிகளும் எழுதப் பெற்றன. எழுதுவதற்குத் தாள் வந்த பின்னர் கூட அறிஞர் பெருமக்களிற் சிலர் தாமே ஓலைகளிலே எழுத்தாணி கொண்டு எழுதிவந்தனர். திருவாமாத்தூர் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகள் தம் கைப்படவே ஓலைகளில் 50,000 பாடல்கட்கு மேல் சிறிதும் பெரிதுமாக 805 தலைப்புள்ள நூல்களை எழுதியுள்ளனர். அவற்றில் நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் அச்சிடப்பெற்று வெளிவந்திருக்கின்றன. அடிகளாருடைய தவத்திரு பேரன், கொள்பேரன் ஆகியோர் முயற்சியினால் ஆண்டுதோறும் ஒருசில நூல்கள் அச்சிடப் பெறுகின்றன. அடிகளார் முருகப்பிரானை வேண்டித் தாம் கருதியது முடிவு பெறாததால் எழுதிய சில சுவடிகளைக் கிழித்தெறிந்துவிட்ட செய்தியும் வரலாற்றால் அறியக் கிடக்கின்றது. அவ்வகையில் ஒழிந்துபோன பாடல்கள் எத்தனை என்பது அறியக்கூடவில்லை. அடிகளார் எழுதிய ஓலைச்சுவடிகளனைத்தும் திருவாமாத்தூர் கௌமாரமடாலயத்தில் பேணிவைக்கப் பெற்றிருக்கின்றன.

ஆங்கிலேயர் ஆட்சிக்கு வந்தபின் கிறித்தவ சமயத்தைப் பரப்ப வந்த தொண்டர்களிற் சிலர் இந்திய மொழிகளிலே இலக்கண வரம்புடையதும் பழைய இலக்கியங்களைக் கொண்ட

தும் தமிழ்மொழி ஒன்றுதான் என்பதை நன்கு அறிந்தமையினால் அதனைப் பயில்வார் ஆயினர். அதன்கண் உள்ள திருக்குறள், நாலடியார், திருவாசகம் போன்ற தலைசிறந்த இலக்கியங்களை யும் நன்னூல் போன்ற இலக்கணங்களையும் கலை நூல்களையும் ஆங்கிலத்திலே மொழிபெயர்த்து அச்சிட்டனர். தமிழ் தமிழ் அகர முதலி, ஆங்கிலந் தமிழ் அகர முதலி நூல்களையும் எழுதி அச்சிட்டனர். ஈய அச்சு எழுத்து வருமுன்னர் மர அச்செழுத் தில் சில நூல்களை அச்சிட்டு வந்தனர்.

ஈய அச்செழுத்து 1820 இல் வந்தபின் தமிழ் மக்கள் ஓலைச் சுவடிகளிலிருந்து இலக்கண இலக்கியங்கள், மற்றும் பலதுறை நூல்கள் முதலியவற்றை அச்சிட்டு வரலாயினர். அங்ஙனம் அச்சிடப்பெற்ற நூல்களை வாங்கி வைத்து விற்பதற்கும் நிலையம் ஒன்று இருந்ததென்று 1839 இல் அச்சிடப்பெற்ற 'கௌரி பஞ்சாங்கம்' என்ற ஒரு சிறிய நூலின்கண் குறிக்கப்பெற் றுள்ளது. அதன் முகவரி அடியிற் காண்க.

சைதாபுரம் உமாபதி முதலியார், சிற்றம்பல முதலியார்,
பொன்னம்பல முதலியார்

*கல்விக் களஞ்சிய அச்சுக்கூடத்தின் உரிமையாளர்கள்*
*48, ஜெனரல் முத்தையா முதலியார் தெரு, சென்னை.*

இவர்கள் பதிப்பித்த நூல்களோடு மற்றுந் தனிப்பட்ட வர்கள் வெவ்வேறு அச்சுக்கூடங்களில் வெளியிட்ட நூல்களையும் மேலே குறிப்பிட்டுள்ள உடன்பிறந்தார்கள் வாங்கி விற்று வந்தனர்.

இப்போதிருப்பதுபோல் பல நூல்களை வெளியிடுவதோடு பிறர் வெளியிட்ட நூல்களையும் வாங்கி விற்கும் பதிப்பகங்கள் பல அக்காலத்தில் இல்லை என்பது நன்கு தெரிகின்றது.

1920 இல் 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' நிறுவப் பெறுவதற்கு முன் இருந்த நிலைமையினையும் பின்னுள்ள நிலைமையினையும் இங்கே விளக்கி எழுதுவது பொருத்தமாகும்.

கழகத்தை நிறுவிய என் அருமைத் தமையனார் திருவரங்கனார் கொழும்பில் ஒரு வணிக நிலையத்தில் அலுவல் பார்க்கும்போது மறைத்திரு மறைமலையடிகளார் நூல்களைப் படிக்கவே தமிழின்பால் அவர்கட்குத் தனிப்பற்று ஏற்பட்டது. எனவே அடிகளாரை இரண்டு மூன்றுமுறை கொழும்புக்கு வரவழைத்துச் சொற்பொழிவாற்றச் செய்து பொருளுதவி செய்தனர். அடிகளார் எழுதிய நூல்களை வரவழைத்து

விற்றுப் பணம் அனுப்பி வந்தனர். அடிகளார் தம் நூல்கள் ஒவ்வொன்றையும் 300 படிகளே அச்சிட்டு வந்தனர். இனி ஒவ்வொரு நூலையும் 1000 படிகள் அச்சிடுமாறு அடிகளார்க்கு என் தமையனார் ஊக்கமூட்டி வந்தனர்.

என் தமையனாரவர்கள் இரண்டாண்டுகட்கு ஒருமுறை கொழும்பிலிருந்து எங்கள் ஊரான பாளையங்கோட்டைக்கு வரும்போது இரண்டு பெட்டிகள் நிறையப் புத்தகங்கள் வாங்கி வருவர். ஊரில் தங்குகிறபோதும் விலைபெறும் பதிவஞ்சலில் புத்தகங்கள் வரும். அப்போது யான் உரிமையோடு என் தமையனாரவர்களிடம் "செலவுக்குப் பணம் போதாமல் துன்புறும் போது வட்டிக்குப் பணம் பெற்று நூல்களை வாங்குகின்றீர்களே'' என்று கேட்பேன். அவர்கள் அதற்கு அதன் அருமையினைப் பிற்காலத்தில் நீ தெரிவாய் என்று வருமுன் அறிந்து கூறுபவர் போல் சொல்லி அமைதிப்படுத்துவர். உள்ளபடியே அவர்கள் நூல் வாங்கிவந்த பாங்கினைப் பதிப்புத் துறையில் பணி புரிவதால் இப்போது நன்கு உணர்ந்து மகிழ்கின்றேன்.

அவர்கள் கொழும்பில் இருக்கும்போது அடிகளார் புத்தகங்களை வரவழைப்பதல்லாமல் சென்னையிலுள்ள ரிப்பன் அச்சுக் கூடத்தார், கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தார், ஆறுமுக நாவலர் அச்சுக்கூடத்தார், டாக்டர் சாமிநாதையர் ஆகியோர் பதித்த நூல்களோடு இன்னுஞ் சில பதிப்பாளர் நூல்களையும் 'திருசங்கர் கம்பெனி' என்ற நிறுவனப் பெயரில் வரவழைப்பர். தம் பெயரில் உள்ள 'திரு' என்ற பகுதியினையும் தமக்கு உடன் பிறந்தார் போன்ற 'சங்கர நாராயணர்' என்ற பெயரிலுள்ள 'சங்கர்' என்ற பகுதியினையும் எடுத்து இணைத்துத் 'திருசங்கர்' என்ற பெயரினைத் தமது புத்தக வணிக நிலையத்துக்கு அமைத்துக் கொண்டனர். அங்ஙனம் தாம் வரவழைக்கும் நூல்களை நெல்லை மாவட்டத்திலிருந்து சென்று கொழும்பில் வாணிகம் செய்பவர்களிடத்தும் இலங்கைத் தமிழர்களிடத்தும் விற்றுப் பணம் பெறுவர்.

1918இல் கொழும்பை விட்டுப் பாளையங்கோட்டைக்கு வந்து, பின் சென்னைக்குப் போந்தனர். பல்லாவரத்தில் மறைத்திரு மறைமலையடிகள் இல்லத்திலே சில நாள்கள் தங்கினர். பின்பு 'செந்தமிழ்க் களஞ்சியம்' என்ற பெயரில் திருவாசகத்துக்கு மறைமலையடிகளாரைக் கொண்டு விரிவுரை எழுதச் செய்து ஆண்டுக் கையொப்பம் ரூ. 6/- ஏற்படுத்தி 24 பக்க அளவில் பகுதி பகுதியாக வெளியிடுவதெனத் திட்டஞ் செய்தனர். திருவாசகம் நான்கு அகவல்கட்கு மட்டும் எழுதிய

விரிவுரை 12 பகுதிகளில் முடிவுற்றது. அடிகளார் தொடர்ந்து விரிவுரை எழுத இசையாமல் அத்தொண்டு நின்றுவிட்டது.

திருசங்கர் கம்பெனி சென்னை, பவழக்காரத் தெரு 2ஆம் எண் இல்லத்தின் கீழ்வீட்டு முகப்பு அறையில் நடைபெற்றது. அப்போது விற்கப்பெருமல்;கோமளேசுவரன் பேட்டையில் ஒரு வீட்டில் கட்டிவைக்கப் பெற்றிருந்த பெரிய புராணம் ஆறுமுகத் தம்பிரான் உரை 4 பகுதிகளையும், எழுமூரில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மாணவர்களில் ஒருவரான பெரும்புலவர் சோடசாவதானம் சுப்பராய செட்டியார் எழுதிய பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராண உரை 2 பகுதிகளையும் விலை பேசி ஒவ்வொரு முறையும் 10 தொகுதிகள் விழுக்காடு வாங்கிக் கட்டடஞ் செய்து விற்றுக் கொடுத்தனர். அவ்வாறு உதவியதனால் அத்தொகுதிகளை வைத்திருந்த குடும்பத்தினர் என் தமையனாரை வாயார வாழ்த்தி வந்தனர்.

அத்தொகுதிகளைப்போல் சென்னை தங்கசாலை வீதியில் ஒரு வீட்டிலே 3 பகுதிகளாக அச்சிடப் பெற்று விற்காமலிருந்த பன்னிரு திருமுறையினையும் வாங்கிக் கட்டடம் செய்து விற்றுக் கொடுத்தனர். அங்ஙனமே இராயப்பேட்டையில் வல்லிதெய்வ நாயக முதலியார் இரண்டு பகுதிகளாக அச்சிட்டு வைத்திருந்த உரைநடையோடு கூடிய கந்தபுராணச் செய்யுள் நூலையும் வாங்கி விற்றுக் கொடுத்துப் பாராட்டினைப் பெற்றனர் என் அருமைத் தமையனார்.

யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் மக்கள் புரசைபாக்கம் வேளாளர் தெருவில் குடியிருந்தனர். அவர்களிடம் தாமோதரனார் அச்சிட்ட தொல்காப்பிய உரைகள், வீரசோழியம், சூளாமணி, இலக்கண விளக்கம், கலித்தொகை உரை முதலிய நூல்களில் சில படிகள் விற்கப்பெருமல் இருந்தன. அவற்றையும் என் தமையனார் பெற்று விற்றுக் கொடுத்தமையும் நினைவுகூர்ந்து மகிழ்தற்குரியது.

திருசங்கர் கம்பெனிப் பெயரில் சென்னையிலும் பிற இடங்களிலும் கிடைக்கப்பெறும் தமிழ் நூல்களுக்குப் புத்தக விளம்பரம் அச்சிட்டுப் பள்ளிகள் கல்லூரிகட்கும், அறிஞர்கட்கும் அனுப்பி வரப்பெறும் கட்டளைகட்குப் புத்தகங்களை விலைபெறு அஞ்சலில் அனுப்பி வந்தனர்.

அவ்வாறு நடத்தி வரும்போது காந்தியடிகளின் வழியைக் கடைப்பிடித்து வாழ்ந்துவந்த திருவாளர் தி. க. விசுவநாத

பிள்ளை, பி.ஏ., அவர்கள் விரும்பியபடி திருநெல்வேலி மா. திரவியம் பிள்ளை அவர்களும் என் தமையனார் வ. திருவரங்கனாரும் கூட்டமைச்சர்களாகத் 'திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்' என்னும் கூட்டுப் பங்கு நிறுவனம் 21—9—1920 இல் திருநெல்வேலியில் பதிவு செய்யப்பட்டது. இங்கே 'யான் பிறந்தது 22—9—1897' என்பது குறிப்பிடத்தக்கது. இதுவே இந்தியாவில் புத்தக வெளியீட்டுக்கென முதன் முதலில் பதிவு செய்யப்பட்ட கூட்டுப் பங்கு நிறுவனம் (Public Limited Company) ஆகும். பங்கு ஒன்றுக்கு ரூ 10/- விழுக்காடு 5,000 பங்குகள் கொண்ட நிறுவனத்திற்கு ரூ 50,000 முதலீடாகும். என் தமையனார் 1944 ஏப்ரலில் இறையடி சேர்ந்த பின்னரே 5,000 பங்குகளுக்கும் ரூ 50,000 வரவு வரப்பெற்றது.

தொடக்க காலத்தில் சைவ சமய நூல்களும் தமிழ் இலக்கண இலக்கியங்களுமே அச்சிடப் பெற்றன. மூவர் தேவாரங்களும், பரஞ்சோதியார் திருவிளையாடற் புராண உரையும், திருக்குறள் பரிமேலழகருரையும் அழகியவாய்ப் படங்களுடன் உயரிய கட்டடஞ் செய்து வெளியிடப்பெற்று மக்கள் மனங் கவர்ந்தன வெனினும் அவை மெள்ள விற்கப் பெற்றமையால் போதிய வருவாய் இல்லை. எனவே பங்காளிகட்குப் பங்கூதியம் 100 க்கு 6 க்கும் குறைவாகவே கொடுக்கப் பெற்றது. ஓராண்டு பணத்துக்குப் பதில் புத்தகங்கள் அனுப்பிவைக்கப் பெற்றன. கழக விதிகளின்படி கழகம் அச்சிட்டுவரும் நூல் விற்பனையினால் செலவு நீக்கிக் கிடைக்கப்பெறும் ஊதியத்தில் நேர்பாதி அறநிலையங்கட்கு உரிமையாகும். பங்காளிகட்கு 100 க்கு 6க்கு மேல் பங்கூதியம் பெற உரிமை கிடையாது என வரையறுக்கப் பெற்றுள்ளது. அறத்துக்கு ஒதுக்கப்படுந் தொகையினைக் கொண்டு தமிழ் வளர்ச்சிக்குத் தென்னிந்திய தமிழ்ச் சங்கமும், சைவ சமய வளர்ச்சிக்குத் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கமும் நடைபெறுகின்றன.

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம் நெல்லையில் திருவள்ளுவர் புலவர் கல்லூரியும், குமரகுருபரர் குழந்தைப் பள்ளியும் நடத்துவதோடு தமிழ் இலக்கிய மாநாடுகளும் நடத்துகின்றது. தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம் நெல்லையில் சிவஞான முனிவர் நூல் நிலையமும், சென்னையில் மறைமலையடிகள் நூல் நிலையமும், பல்லாவரத்தில் மறைமலையடிகள் கலை மன்றமும் நடத்துகின்றது. மேலும் சமய மாநாடுகளும் இடையிடையே நடத்துவதுண்டு. உலகிலே எந்த நூற்பதிப்புக்

கழகமும் நூல் நிலையங்களை நடத்துவதில்லை என்பது இங்கே நினைவுகூர்ந்து கழிபேருவகை யடைதற்குரியது

'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழை 49 ஆண்டு களாகக் குறிக்கோளோடு இன்றுவரை இடையறவு படாமல் சிறப்பாகக் கழகம் வெளியிட்டு வருகின்றது. அது வரலாற்றுக் களஞ்சியமும் கலைக் களஞ்சியமுமாகும். உலகிலே பதிப்பகங்கள் இதழ் வெளியிடுவதுண்டு. ஆனால் நூல் நிலையம் நடத்துவ தில்லை. இது தமிழகத்துக்குச் சிறப்பூட்டும் ஒரு புதுமைச் செயலாகும்.

1927 முதல் கழகம் பள்ளிகட்கும் கல்லூரிகட்கும் பயன் படத்தக்க ஒரு சில துணைப் பாட நூல்களும், தமிழ்ப் பாட நூல் களும் வெளியிடத் தொடங்கிற்று. படிப்படியே பள்ளிகட்குரிய இலக்கண நூல்களும் கணித நூல்களும் வெளியிட்டது. அவை சில பள்ளிகளில் பாடமாக வைக்கப் பெறுவதுண்டு. துணைப் பாட நூல்கள் ஒரோவொருகால் கல்லூரிகட்குப் பாடமாக வைக்கப் பெறும். அவற்றிற்கும் பெரும் போட்டியுண்டு. எனினும் தமிழிலும் சமயத்திலும் பற்றுள்ள பள்ளி ஆசிரியர் களில் ஒரு சிலரும் மாவட்டக் கழகத் தலைவர் செயலர்களில் ஒரு சிலரும், நகராட்சித் தலைவர் ஆணையர்களில் ஒரு சிலரும் செய்துவந்த உதவிகள் பாராட்டுதற்குரியன. கழகம் இதுவரை மூன்று நூல்நிலையங்களையும், புலவர் கல்லூரி, குழந்தைப் பள்ளி ஆகியவற்றையும் நடத்திவருவதோடு பல இலக்கிய மாநாடுகளை யும் சமய மாநாடுகளையும், நான்கு பெரு விழாக்களையும் நடத்தி யுள்ளது. அம் மாநாடுகளினால் என்றும் நின்று பயன்படும் சொற்பொழிவு நூல்களும், படங்களோடு ஆராய்ச்சிக் கட்டுரைக ளடங்கிய மலர்கள் நான்கும் வெளியிடப் பெற்றுள்ளன.

1970 இல் தமிழக அரசு தானே பாடநூல்களை வெளியிடத் தொடங்கியமையினால் கழகப் புத்தக விற்பனை வரவரக் குறையத் தொடங்கியது. அதனால் கழகம் நடத்திவரும் மறைமலை யடிகள் நூல் நிலையம், சிவஞானமுனிவர் நூல் நிலையம், மறைமலையடிகள் கலைமன்றம் ஆகியவற்றை நடத்துவதற்கும் மேலும் அவற்றை வளர்ப்பதற்கும் வருவாய் போதவில்லை. எனவே தமிழக அரசிடமும் நடுவணரசிடமும் பொருளுதவி பெற விண்ணப்பம் அனுப்பி முயன்று வருகின்றோம்.

இன்றைய நூற்பதிப்புக் கழகத்தின் நிலை இதுவென விளக்கப் பெற்றுள்ளது.

பொதுவாகப் பாடநூல்களைக் கருதிப் பல நூற்பதிப்பு நிலையங்கள் நாகர்கோயில், நெல்லை, மதுரை, திருச்சி, குடந்தை, கோவை, ஈரோடு, சேலம், சென்னை முதலிய நகர்களில் தோன்றின. பாடநூல்களை வெளியிட்டமையால் கிடைக்கப்பெறும் ஊதியத்தைக் கொண்டு ஒரு சில பதிப்பு நிலையங்கள் இலக்கணம்; இலக்கியம், புதினம், நாடகம், அறிவியல், ஆராய்ச்சி முதலான நூல்களை வெளியிடலாயின. சிலர் வினாவிடை நூல்களை வெளியிட்டுப் பெரும்பொருள் ஈட்டுவாராயினர். புலவர் கல்லூரிக்குரிய இலக்கண இலக்கியங்கட்கும் கல்லூரி ஆசிரியர்களில் ஒரு சிலர் வினாவிடை விளக்கம் போன்ற நூல்களை வெளியிடுகின்றனர். அரசு பள்ளிப் பாட நூல்களை வெளியிடுகின்றமையால் பாடநூல்களைப் பெரும்பான்மையாகவும் ஏனைய நூல்களைச் சிறுபான்மையாகவும் வெளியிட்ட நூற்பதிப்பு நிலையங்கள் பல ஒழிந்து போயின. அவற்றை நடத்தியவர் வெவ்வேறு துறைகட்குப் போய் விட்டனர். சிலர் அரசு பாடநூல்களை மொத்தமாகவும் சில்லறையாகவும் வாங்கி விற்பதில் இறங்கியுள்ளனர்.

காதற் கதைகளுள்ள நூல்களையும், புதினங்களையும், இதழ்களையும், மக்கள் படிப்பதாலும், மாணவர்கள் மூல இலக்கண இலக்கியங்களை வாங்காமல் வினாவிடை நூல்களை வாங்கிப் படிப்பதாலும், ஆசிரியர்களிற் சிலரும் மாணவர்களை அவ்வாறு படித்தால் எளிதிலே தேர்ச்சி பெறலாமென்று கூறுவதாலும், மூல இலக்கண இலக்கிய ஆராய்ச்சி நூல்கள் விற்பனை மிகவும் குறைந்துவிட்டது.

அரசியல், காதற் செய்திகள், கொள்ளை, திருட்டு, படக்காட்சிக் குறிப்புகள், கவர்ச்சிதரும் படங்கள் ஆகியவை வெளியிடப்பெறும் இதழ்கள் பொதுமக்கள், மாணவர்கள் உள்ளங்களைப் பெரிதும் கவர்வதால் சிறந்த இலக்கியங்கள், அறிவியல் ஆய்வு நூல்கள் முதலியவற்றைப் படிக்கிற பழக்கம் மிகவும் குறைந்துவிட்டது. பள்ளி கல்லூரி நூல் நிலையங்கள், கூடுதலான கழிவு கிடைக்கப் பெறுகிற நூல்களை மிகுதியாகவும் கழிவு குறைவுள்ள நூல்களைக் குறைவாகவும் வாங்குகிற பான்மையும் காணப்படுகிறது. பட்டியலில் குறிக்கப்பெறும் வழக்கமான வணிகக்கழிவேயன்றிக் கூடுதல் கழிவுத் தொகையினைத் தனியே பெறுகின்ற முறையும் தெரிகின்றது. புலமைமிக்க ஆசிரியர்கள் ஆராய்ந்து அரிய நூல்களை எழுதுவதற்கும் அவற்றை நேர்மையுள்ள பதிப்பகங்கள் ஏற்று அச்சிடுவதற்கும் ஊக்கந் தராமற் போவதும் காணப்பெறுகின்றது.

மாத இதழ்களில் முதன்முதல் ஆனந்தபோதினிதான் ஆண்டுக் கையொப்பம் ஒரு ரூபாய் வைக்கப்பெற்றுப் பல ஆயிரம் படிகள் விற்கப்பெற்றன. அதனையறிந்து ஆனந்த குணபோதினி. ஆனந்த விகடன், பிரசண்ட விகடன், அவற்றை யடுத்துக் கல்கி, குமுதம் ஆகிய இதழ்கள் பல்லாயிரக்கணக்கில் கிழமை தோறும் விற்கப்பெறுகின்றன. 'கலைமகள்' தொடக்கத்தில் இலக்கியக் கட்டுரைகளையும் டாக்டர் சாமிநாதையர் நூல்களைப் பின் இணைப்பாகவும் வெளியிட்டு வந்தது. பின்பு கதைகள், கவர்ச்சி தருஞ் செய்திகள் முதலியவற்றைப் படங்களுடன் வெளியிடலாயிற்று.

அரசியல் நோக்கங் கொண்டு பல நாள் இதழ்கள், கிழமை இதழ்கள், திங்கள் இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றிற் சில தோன்றி மறைவதையும் காண்கின்றோம். பொதுமக்கள், மாணவர்கள் நேரங்களையும் இவ்விதழ்களே பெரும்பாலுங் கவர்கின்றன. எனவே மக்கள் சிறந்த இலக்கண இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், அறிவியல் நூல்கள், மக்கள் நல்வாழ்வுக்குரிய புதினங்கள், நாடகங்கள் முதலியவற்றை விரும்பி வாங்கிப் படிப்பதில்லை.

அங்ஙனம் வெளியிடப்பெறும் ஒரு நூலை ஆயிரம் படிகள் அச்சிட்டால் அது விற்பதற்குப் பத்து ஆண்டுகளுக்கு மேலாகின்றது. அதனால் அதனை உழைப்பெடுத்து எழுதும் ஆசிரியர்க்கோ அதனைப் பதிப்பிடும் நிலையங்கட்கோ போதிய ஊதியம் கிடைப்பதில்லை.

சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், குறள்கூறும் சட்டநெறி, சட்டவியல், தீங்கியல் சட்டம், சட்டமன்ற நடைமுறை, கொசு ஒழிப்பு போன்ற நூல்கள் விற்பதற்குப் பத்து ஆண்டுகட்கு மேலாகின்றன. அதனால் அவற்றை எழுதிய ஆசிரியர்கள் பெற்றுவரும் ஊதியம் மிகவுங் குறைவாக இருப்பதால் அவர்கட்கு மேலும் புதிய ஆராய்ச்சி நூல்கள் எழுதுவதற்கு ஊக்கம் ஏற்படுதற்கில்லை.

கழகம் கிளையினைச் சென்னையில் தொடங்கியபோது புத்தகப் பதிப்பாளர்களாகவுள்ள ரிப்பன் புத்தக நிலையம், புட்பாதச் செட்டியார் கம்பெனி, ஆறுமுக நாவலர் அச்சுக்கூடம், டாக்டர் வே. சாமிநாதையர் இல்லம், பி. நா. சிதம்பர முதலியார் புத்தக நிலையம், வை. மு. கோபாலகிருட்டிண மாச்சாரியார், சே. கிருட்டிணமாச்சாரியார், சி. சி. குமாரசாமி

நாயுடு சன்சு, ஆனந்தபோதினி நிலையம், பிரம்பூர் செல்வக் கேசவராய முதலியார் சன்சு, ஒற்றுமை நிலையம், விவேக போதினி நிலையம், பூமகள் விலாசம், இரத்தின நாயக்கர் புத்தக நிலையம், வாவிள்ளா இராமசாமி சாத்துருலு புத்தக நிலையம் முதலான புத்தக நிலையங்களிலிருந்து அவரவர்கள் அச்சிட்ட நூல்களை வாங்கி வந்து விற்பதுண்டு. சென்னைப் பல்கலைக் கழகம், இராமகிருட்டிண மடம், அடையாறு தியசாபிக்கல் கழகம் ஆகிய பதிப்பு நிலையங்களிலிருந்தும் புத்தகங்களை வாங்கி விற்பதுண்டு. மேலும் பல்லாவரம் மறைமலையடிகள் பொது நிலைக் கழகம், மதுரைத் தமிழ்ச் சங்கம், கோபாலகிருட்டிணக் கோன் புத்தக நிலையம் ஆகியவற்றிலிருந்தும் புத்தகங்களை வரவழைத்து விற்று வருவதுண்டு. இவை அல்லாமல் மயிலாப்பூர், பெத்துநாயக்கன் பேட்டை, புரசைபாக்கம், திருவல்லிக்கேணி, இராயப்பேட்டை, கோமளீசுரன் பேட்டை, சிந்தாதிரிப்பேட்டை ஆகிய பகுதிகளில் தனிப்பட்ட சிலர் வெளியிட்ட நூல்களையும் வாங்கி விற்பனை செய்வதுண்டு.

பள்ளிப் பாடநூல்களை சி. சி. குமாரசாமி நாயுடு சன்சுக்குப் பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் எழுதிக் கொடுத்து அவற்றின் விற்பனையிலிருந்து கிடைக்கும் ஊதியத்தில் பெரும் பொருள் பெற்று மதிக்கத்தக்க செல்வராக வாழ்ந்தனர். எப்போதும் அவர்கள் இல்லத்தில் ஆசிரியன்மார் சிலர் தங்குவதைக் காணலாம். அவர்கள் கோடை விடுமுறையில் உதகைக்குச் சென்றால் அவர்களோடு ஆசிரியர் சிலர் சென்று அவர்கள் அரவணைப்பில் தங்குவதுண்டு.

1820க்குப் பின் தில்லையம்பூர் சந்திரசேகர முதலியார், திருத்தணிகை கந்தப்ப ஐயர், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர், இராமாநுச கவிராயர், குணவீர பண்டிதர், வீராட்சிமங்கலம் மழவை மகாலிங்கையர், தி. சிவன்பிள்ளை முதலியவரும் 20 ஆம் நூற்றாண்டில் சுன்னாகம் அ. குமாரசாமி பிள்ளை, சுவாமிநாத பண்டிதர், பம்மல் சம்பந்த முதலியார், தமிழ் நுண்கலை அறிஞர் பா. வே. மாணிக்க நாய்க்கர் முதலியோரும் பல நூல்களை வெளியிட்டுள்ளனர்.

இயற்றமிழாசிரியர் இராமாநுச கவிராயர் இயற்றிய 'நன்னூல் விருத்தியுரை' 1847இல் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. இவ்வுரைக்குச் சாத்துக்கவி வழங்கியோர் தொல் காப்பியம் வரதராச முதலியார், அட்டாவதானம் வீராசாமிக் கவிராயர், களத்தூர் வேதகிரி முதலியார், சேமங்கலம் தமிழ்ப் புலமை நாராயண உபாத்தியாயர் ஆகியோராவர், தமிழ்ப்

புலமையுடைய W. H. துரு, டி கிளார்க் ஆகியோரும், சி. ஏ. பிரவுன் அவர்களும் ஆங்கிலத்தில் பாராட்டுரை வழங்கி யுள்ளனர்.

156 படிகட்கு 72 பேர் கையொப்பம் அளித்துள்ளனர். இவர்களில் 32 பேர் மேனாட்டறிஞர்களாவர். அம் முப்பத் திருவரில் தவத்திரு துரு 12 படிகளும், டி. கிளார்க் 3 படிகளும், லெப்டனென்ட் கர்னல் பிரவுன் 6 படிகளும், தவத்திரு ரோட்சர்சு 10 படிகளும், தவத்திரு நிம்மோ 3 படிகளும், நன்னூல் பாயிரம் மொழிபெயர்ப்பாளர் தவத்திரு எச். பவர் 6 படிகளும் தவத்திரு பிரதர்டன் 2 படிகளும் வாங்கியமை மிகவும் பாராட்டுதற்குரியது. சென்னைத் தமிழ்ப் புத்தகக் கழக (Madras School book Society) த்தார் மட்டும் 15 படிகட்குக் கட்டளை கொடுத்தனர். 1847இல் நன்னூல் விருத்தியுரை வெளியிடுவதற்கு மேனாட் டறிஞர்களும் தமிழக அறிஞர்களும் முன்பணங் கொடுத்து நூல் வெளிவர உதவியது எத்துணை பாராட்டுதற்குரியதென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

1820க்குப் பின் பதிப்பிக்கப் பெற்ற சில நூல்களில் விலைக்குக் கிடைக்கப்பெறும் நூல்கள் இவை என்றும், பதிப்பித்து வரும் நூல்கள் இவை என்றும், இனிப் பதிப்பிக்கப்பெறும் நூல்கள் இவை என்றும் குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றைப் பற்றி இங்கே விளக்குவது இன்றியமையாததாகும்.

1855 இல் சென்னை சரசுவதி அச்சுக்கூடத்தில் இப்போது பதிப்பிக்கப் படுவன என்ற தலைப்பில்,

1. ஒருசொற் பலபொருட் பெயர்த் தொகுதியுரை
2. தஞ்சைவாணன் கோவை
3. இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவை

என்ற நூல்களும், இனிப் பதிப்பிக்கப் படுவன என்ற தலைப்பில்,

1. வீரசோழியம், 2. இலக்கண விளக்க மூலம், 3. சமுத் திர விலாசம், 4. உத்தண்டன் கோவை என்ற நூல்களும் காணப்படுகின்றன.

காஞ்சி நாகலிங்க முனிவரால் இந்து தியாலஜிகல் அச்ச கத்தில் சிவன்பிள்ளை உரையுடன் கூடிய 'பிங்கல நிகண்டு' 1890 இல் பதிக்கப் பெற்றது. அதன்கண் அச்சிடப் பெற்றவை என்ற தலைப்பில் 'உரிச்சொல் நிகண்டு' காணப்பெறுகின்றது. இனிப் பதிப்பிக்கப் படுபவை என்ற தலைப்பில்,

1. யாப்பருங்கல விருத்தி, 2. இசை மரபு, 3. பரத சூடாமணி, 4. இசைநுணுக்கம், 5. பன்னிருபடலம், 6. வளையாபதி, 7. பன்னிருபாட்டியல், 8. கவிசாகரம், 9. பிரபந்ததீபம், 10. தொல்காப்பியம் சொல், கல்லாடனாருரை, 11. இரேவணாராத்தியர் சூத்திர அகராதி, ஆகிய 11 நூல்கள் காணப்பெறுகின்றன. இவற்றில் 1, 2, 3, 4, 5, 6, 8, 9, 11 ஆகிய நூல்கள் வெளியிடப் பெற்றனவாகத் தெரியவில்லை. ஆனால் பவானந்தர் கழகம் பிற்காலத்தில் யாப்பருங்கல விருத்தியை வெளியிட்டது. மேலும் கழகம் 'தொல். சொல். கல்லாடனார் உரை', 'வளையாபதி விடுதிச் செய்யுள்கள்' ஆகியவற்றை வெளியிட்டுள்ளது. இசை மரபு, இசை நுணுக்கம், பரத சூடாமணி போன்ற இசை நூல்கள் வெளியிடப் பெறாமல் மறைந்து போனமை மிகவும் வருந்து தற்குரியது.

சென்னை முத்தமிழ் அச்சுக்கூடத்தில் 1860 இல் அச்சிடப் பெற்ற திருக்கோவையார் உரை நூலில் காணப்படும் அச்சிற் பதிப்பிக்கப்பெற்ற நூற்பட்டியலிலுள்ள 17 நூல்களும் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலரால் பதிக்கப் பெற்றவை எனத் தெரிகிறது. அச்சிற் பதிக்கப் பெறும் நூல்கள் 1. பெரிய புராணம் சூசனங்களோடு, 2. திருவள்ளுவர் பரிமேலழகருரை, 3. தருக்க சங்கிரகம் அன்னம்பட்டியம் ஆகிய மூன்றும் சிவத்திரு ஆறுமுக நாவலர் அச்சிட்டு வெளிப்படுத்தியவை யாகும்.

ஆனால் இனி அச்சிற்பதிக்கப்படும் என்ற தலைப்பில் காணப் பெறும் 59 நூல்களில் தொல்காப்பியம் இளம்பூரணர் உரை, வ. உ. சிதம்பரனாராலும், தொல்காப்பியம் சொல் சேனாவரையமும், தொல்—எழுத்து, சொல், பொருள், நச்சினார்க்கினியருரையும், இறையனாரகப் பொருளுரையும், வீரசோழியம் உரையும், கலித்தொகை உரையும் சி. வை. தாமோதரனாராலும், சீவக சிந்தாமணி உரை, சிலப்பதிகாரம் உரை, மணிமேகலை உரை, புறநானூறு உரை, புறப்பொருள் வெண்பாமாலை உரை, ஆகிய ஐந்தும் டாக்டர் உ. வே. சாமிநாதையவர்களாலும் 1911இல் கல்லாடம் உரை ரிப்பன் அச்சகத்தாராலும் மற்றும் நூற்களிற் சில வெவ்வேறு பதிப்பாளர்களாலும் வெளியிடப் பெற்றுள்ளன. ஆனால் சோமவார கற்பம், உருத்திராக்க வசிட்டம், ஆசௌச தீபிகை, பிராயச்சித்த சமுச்சயம், அருங்கலச்செப்பு உரை ஆகிய ஐந்து நூல்களும் வெளியிடப் பெற்றனவாகத் தெரியவில்லை.

பழம் பதிப்பு நூல்களில் இந்தப்படி பதிப்பிலிருக்கிற நூல்கள் இனிப் பதிப்பிக்கப் பெறும் நூல்கள் என்று காணப்

பெறுகின்றன. அப்படிக் காண்பவற்றில் சில அச்சிடப் பெற்று வெளிவந்தனவாகத் தெரியவில்லை. அவற்றில் 'ஒன்று 'காக்கை பாடினியம்'

அச்சிடுதற்கு ஆயத்தமாகவுள்ள நூல்கள் அழிந்தொழிந்து போவதுபோல அச்சிடப்பெற்ற நூல்களிற் சிலகூட எங்குக் கிடைக்கும் என்று தெரிதற்கில்லாமல் ஒழிந்து போவதைக் கண்டு வருகிறோம்.

தனிப்பட்டவர் பலர் தம்மிடமுள்ள நூல்களை அச்சிட்டு அவை விற்கப் பெறுமல் பொருளிழந்து துன்புற்றனர். பலர் இருந்தஇடந் தெரியாமல் போனதுமுண்டு.

கழகந் தோன்றிய பின் மறைந்து மடிந்து போன பதிப்பு நிலையங்கள் பல உள. ரிப்பன் பதிப்பு நிலையம், புட்பரதச் செட்டியார் பதிப்பு நிலையம், பி. நா. சிதம்பர முதலியார் பதிப்பு நிலையம், பூமகள் விலாச புத்தக நிலையம், கோ. வடிவேலு செட்டியார் பதிப்பு நிலையம், வைத்தியராமையர் கம்பெனி, கலியாணசுந்தரமையர் கம்பெனி, பி. ஆர். இராமையர் கம்பெனி, ஜி. ஏ. நடேசன் கம்பெனி முதலியன மறைந்து போயின. ஜி. ஏ. நடேசன் கம்பெனி நடத்திய 'இந்தியன் ரிவியு' என்ற இதழை திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் குடும்பத்தினர் வாங்கி நடத்துவதாகத் தெரிகிறது.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தொகுத்து வைத்திருந்த நூல்களையும் சுவடிகளையும் திருவாட்டி ருக்குமணி அம்மையார் அவர்கள் ஏற்றுத் திருவான்மியூரில் புதிய கட்டிடங் கட்டி டாக்டர் சாமிநாதையர் நூல்நிலையத்தை நடத்துகின்றனர். டாக்டர் ஐயர் அவர்கள் நூல்களில் பெரும்பாலனவற்றை அந்த நூல் நிலையமே வெளியிட்டுவருகின்றது.

மறைத்திரு மறைமலையடிகள் நூல்நிலையத்தை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஏற்று 1958 இல் சென்னை இலிங்கிச் செட்டித்தெரு 105 ஆம் எண் கட்டிடத்தில் நடத்தி வருவதோடு அவர்கள் எழுதி விற்றுவந்த நூல்களையும் இக் கழகம் ஏற்று அச்சிட்டு அவர்கள் விருப்ப ஆவணத்தில் குறிப்பிட்டுள்ளபடி விற்பனை ஊதியம் அளித்து வருகின்றது.

தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்கள் நூல்கள் சில ஆண்டுகள் அச்சிடப்பெறுமல் இருந்தன. அவர்கள் அண்ணனர் திரு வி உலகநாத முதலியார் அவர்களின் பெண் மக்கள் இருவரிடையேயுள்ள பிணக்கினை யான் முயன்று நீக்கி

இருவர்க்கும் திரு. வி. க. நூல்களைப் பகிர்ந்தளித்து வெளியிடச் செய்ததோடு அவர்களுடைய 'வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற நூல் மட்டும் கழகவழி அச்சிட்டு விற்பனை ஊதியம் இருவர்க்கும் பகிர்ந்தளிக்கப் பெறுகின்றது.

பேராசிரியர் செல்வக் கேசவராய முதலியார் எழுதி அச்சிட்டு வைத்திருந்த நூல்களை அவர்களுடைய பேரன்மார்கள் விற்காமல் பல ஆண்டுகள் மரப் பேழைகளிற் பூட்டி வைத்து விட்டனர். சில திங்கட்கு முன் அவற்றை விலை கொடுத்து வாங்கி அழகிய கட்டடஞ் செய்து கழகம் விற்று வருகின்றது. அவர்கள் தமது ஆராய்ச்சிக்குத் தொகுத்து வைத்திருந்த ஐநூற்றுக்கு மேற்பட்ட பழைய நூல்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு அன்பளிப்பாக வழங்கப் பெற்றன.

சில பதிப்பு நிலையங்கள் பொருள் முட்டுப்பாட்டினாலும் கால்வழியினர் தகுதி யுடையவர்களாக இல்லாமையினாலும் மடிந்துவிட்டன. அரசு பாடநூல்களை அச்சிட்டமையினால் அவற்றைக் கொண்டு வாழ்ந்த பதிப்பு நிலையங்கள் பல ஒழிந்து போயின. அதனால் பலதுறைகளில் நூல்களை எழுதும் அறிஞர் பெருமக்கள் பேணுவுக்கும் வேலையில்லாது போயிற்று.

அறிவுடைய பெருமக்கள் தகுதியறிந்து அவர்கள் அறிவாற்றல்களை வெளிக் கொணர்தற்கு வேண்டியவற்றைச் செய்வதற்காகத் தக்க பதிப்பகங்களுக்கு அரசு பொருளுதவி செய்ய வேண்டிய கடப்பாடுடையது.

இங்கே தமிழகத்திலுள்ள மூன்று சைவத் திருமடங்கள் திருமுறைநூல்களையும், சைவசமய சாத்திர நூல்களையும் வெளியிட்டு வருவதைக் குறிப்பிடவேண்டுவது இன்றியமையாததாகும்.

கழகம் தொடங்கி இருபது ஆண்டுகட்குப்பின் திருப்பனந்தாள்மடம் குமரகுருபர அடிகள் பேரால் அறக்கட்டளை நிறுவிப் பன்னிருதிருமுறை, குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, திருக்குறள் உரை முதலிய நூல்களை அச்சிட்டுக் குறைந்த விலைக்கு விற்றுவருவது மிகவும் போற்றுதற்குரியது. 'குமரகுருபரர்' என்ற திங்கள் இதழையும் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது.

அதனையடுத்துத் தருமபுர ஆதீனத்தினர் திருமுறைகட்கு உரை, மெய்கண்ட சாத்திர உரைநடை, மெய்கண்ட சாத்திர

முதலிய நூல்களை அச்சிட்டு விற்றுவருவதும் பாராட்டற்குரியது. இம் மடத்தினர் வழி 'ஞானசம்பந்தம்' என்ற பெயரில் திங்களிதழ் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கிறது.

திருவாவடுதுறை ஆதீனத்தார், கணபதி, முருகன், ஆடல்வல்லான் ஆகிய மூன்று நூல்களையும் வண்ணப் படங்களுடன் விளக்கம் எழுதி வெளியிட்டிருப்பதோடு, திருமந்திரத்தைப் பகுதி பகுதியாக விளக்கமெழுதி வெளியிடுவதும், திருவாசகத்துக்கு விளக்கவுரை யெழுதி வெளியிட்டுள்ளதும் போற்றி மகிழ்தற்குரியன.

அச்சுக்கலை வந்தபின் எத்தனையோ தமிழ் அறிஞர் பெருமக்கள் தாங்களே தங்களிடமிருந்த ஏட்டுச் சுவடிகளையும் தம் நண்பர்களிடமிருந்த சுவடிகளையும் கொண்டு பேருழைப் போடு நூல் வடிவில் அச்சிட்டு வெளிப்படுத்தினர். அதற்கு இக் காலத் தமிழ் அறிஞர்கள் என்றென்றும நன்றி செலுத்துங் கடப்பாடுடையவர்களாயிருத்தல் வேண்டும். நூல்களை வெளியிட்டபின், விற்பனையாகாத காரணத்தால் எத்தனையோ குடும்பங்கள் பொருளிழந்து துன்புற்றமையினை நினைந்து நாம் எங்ஙனம் வருந்தாமல் இருக்க முடியும்.

இப்போதாவது பதிப்பு நிலையங்கள் வெளியிடுகின்ற நூல்களை வாங்கி அந் நிலையங்களையும், நூல்களை ஆக்கிய ஆசிரியர்களையும் போற்றுவது கற்றறிந்தார் கடன் என்பதை உணரும்படி வேண்டிக் கொள்ளுகிறோம்.

அரசு பாட நூல்களை வெளியிடுவதனால், பல துறைகளில் நூலெழுதக் கூடிய அறிவாற்றல்மிக்க ஆசிரியன்மார் அனைவர்க்கும் நூலெழுத வாய்ப்பில்லை. அவர்கள் நூல்கள் எழுதினும் அவற்றைப் பதிப்பகங்கள் ஏற்று அச்சிடுவதற்கில்லை. அபபடி அச்சிடினும் அவை விற்பதற்கோ அதனால் ஆசிரியர்கள் தகுந்த ஊதியம் பெறுவதற்கோ வழியில்லை. சில பதிப்பு நிலையங்கள் செய்துவந்த தவறுகட்காக அரசு பாடநூல்களை வெளியிடும் நிலைமை ஏற்பட்டது என்று சொல்வது பொருத்தமாகாது.

பதிப்பு நிலையங்கள் வெளியிடும் நூல்களையெல்லாம் ஆய்வு செய்து குற்றங் குறைகளை யெடுத்துச் சொல்லித் திருததஞ் செய்வதற்குப் பாடநூல் ஆய்வுக்குழு இருந்தது. இப்போது அரசே நூல்களை வெளியிடுவதால், ஆய்வுக்குழு இருப்பதற்கில்லை. ஒருவர் எழுதியதை மற்றவர் கூர்ந்து படித்துத் திருத்துவர் என்று நம்புதற்கில்லை. புடைவை, பைம்புல்வெளி

போன்ற சரியான சொற்களைத் தவறு என்று முன்பு ஒருமுறை கழகப் பாடநூல்களை ஒப்புக்கொள்ளவில்லை. அவை திருத்த மான சொற்களென எடுத்துக் காட்டியபின் ஏற்றுக்கொள்ளப் பெற்றன. இப்போது அப்படிச் சொல்வதற்கு இடமில்லை. மேலும் மாநில முழுமைக்கும் ஒரே புத்தகமாக இருப்பதால் வினாவிடை புத்தக விற்பனை அளவு, பாடநூல் விற்பனையாவ தில்லை என்பதையும் ஆராய்ந்து உண்மை காணலாம்.

பல கட்டுப்பாடுகளுடன் குறைந்த கழிவு கொடுக்கப் படுவதால், மாணவர் அனைவரும் அரசு பாட நூல்களை வாங்கு கின்றனர் என்று சொல்வதற்கில்லை. ஆசிரியர் பலர் வினா விடைகளைக் கொண்டே பாடஞ்சொல்வதும, வினாவிடை நூல் இருப்பதால் மாணவர் ஆசிரியர்களைப் புறக்கணிப்பதும், தேர்வு நேரத்தில் வினாவிடை நூல்களுள் சில பகுதிகளைப் படித்துத் தேர்வு எழுதினாற் போதும் என்று மாணவர்கள் கருதுவதும் யாவரும் அறிந்தனவே.

பதிப்பு நிலையங்கள் தவறு செய்வது அறியின் அவர்களை அத்துறையினின்றும் அகற்றலாம். அதற்காகப் பாடநூல்களை அரசு ஏற்று நடத்துவது என்பது ஒப்புக்கொள்ளக் கூடியது ஆகாது.

அரசு பாடநூல் வெளியீடுகளினால், அரசுக்குப் பேருதியம் காட்டும் வழியில் நிறுவனப் பொறுப்பாளர்க்குப் புகழ் ஏற்பட லாம். ஆனால் அறிவாளர் பலர் தம் அறிவை வெளிப்படுத்துவ தற்கு வாய்ப்பில்லாமற் போகிறது. ஓவியர்கள், அச்சுக்கட்டை செய்பவர்கள், அச்சகத்தார் முதலிய பலர்க்கு வேலை வாய்ப்பில்லை.

பாடநூல் வெளியீட்டுத் துறையில் புதுமை காட்டும் பதிப்பாளர் சிலர் மனம் மடிந்தவர்களாயினர். இதனை அரசும் பொதுமக்களும், சிந்தித்து முடிவு செய்தல் வேண்டும் எனத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## பொது நூலகங்களும் ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படும் தனிப்பெரு நூலகங்களும்

தமிழ் நாட்டிலே ஆயிரத்து இருநூற்றுக்கு மேற்பட்ட பொது நூலகங்கள் இருக்கும்போது நல்ல நூல்களை வெளியிடும் பதிப்பு நிலையங்கள் பொருள் முட்டுப்பாட்டினால் துன்புறு தற்கும் மடிந்து போவதற்கும் காரணமென்ன என்று கேட்க லாம். அதற்குக் கீழே விளக்கந் தருகின்றேன்.

வீட்டு வரிகளோடு சேர்த்து நூலக வளர்ச்சிக்கென ஒரு பகுதி வாங்கப்படுகிறது. அப்படி வாங்கப் பெறுந் தொகைக்குச் சமமான தொகை அரசும் மாவட்ட நூலகங்கட்கு வழங்குகிறது. அங்ஙனங் கிடைக்கப்பெறுந் தொகையிற் பெரும்பகுதி நூலகப் பணியாளர்கட்குரிய சம்பளம், கட்டிட வாடகை, மற்றும் சில்லறைச் செலவுகள் ஆகியவற்றிற்குக் கொடுத்ததுபோக எஞ்சிய சிறு தொகை கொண்டு போதிய அளவு புத்தகங்களை வாங்க முடிவதில்லை என்று பேசப்படுகின்றது. இவ்வாண்டில் மாவட்ட நூலகங்கள் எந்த இதழையும் வாங்கக்கூடாது என்று பொது நூலகர் ஆணை அனுப்பியுள்ளனராம். மேலே கூறப்பட்ட செலவுகளையெல்லாம் அரசு கொடுத்துவிட்டுப் புத்தகங்களை வாங்குவதற்கெனத் தனியே கணிசமான தொகை வழங்குதல் வேண்டுமென்பது நூலகத் துறையிலுள்ளவர்களின் கருத்தாகும்.

நூலகத்துறைக்கென திரு. வே. தில்லைநாயகம் எம். ஏ., எம். எல். எஸ். பொது நூலக இயக்குநராக 30-7-1972இல் அமர்த்தப் பெற்றூர். நல்ல நூல்கள் வெளிவருவதற்கும் அவற்றை ஆக்கும் அறிஞர்கட்கு ஊக்கம் அளிப்பதற்கும் அவற்றை ஏற்று அச்சிடும் பதிப்பு நிலையங்கட்கு உதவி புரிவதற்கும், தமிழ்த்துறையிலும் நூலகத் துறையிலும் உயரிய பட்டங்கள் பெற்றவர்களைக் கொண்டு ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படும் வகையில் பலதுறை நூல்களைத் தொகுத்து வைத்து நடத்தும் நூல் நிலையங்கட்கும் உதவி செய்வதே பொது நூலகர்க்குரிய தனிப்பெருங் கடமையாகும்.

இவற்றைக் கவனித்துப் பொது நூலக இயக்குநர் காய்தல் உவத்தலின்றி நல்லுள்ளத்தோடு உதவி செய்வார்களாயின், பயன்தரும் நூல்களை ஆராய்ச்சி அறிஞர்கள் ஆக்குவர். அவை கட்டாயம் நூல் நிலையங்களிலே இடம் பெறும் என்ற நம்பிக்கையோடு பதிப்பு நிலையங்கள் அவற்றைத் துணிந்து வெளியிடும்.

பதிப்பு நிலையங்கள் வாழவும் ஆராய்ச்சியாளர்கட்குரிய நூல்நிலையங்கள் சீரிய முறையில் தொண்டாற்றவும் செய்வதற்குரிய கடமை பொது நூலகர்க்கே உண்டு என்பதைச் சுட்டிக் காட்டி இதுவே 'நூற்பதிப்பகங்கள் மடிவதேன்?' என்பதற்கு விடை தரும் என இத்துடன் நிறுத்துகின்றேன்.

*கலைப்பொருட்டால் கல்லா துலகெனின் யாரும்*
*விலைப்பொருட்டால் நூல்பதிப்பா ரில்.*

**வ. சுப்பையா.**

# ஓசனித்தல்

## (Migration of Birds)

[பி. எல். சாமி பி. எசி.]

சிலப்பதிகாரத்திலும் சீவக சிந்தாமணியிலும் 'ஓசனித்தல்' என்றொரு சொல் பயில்கின்றது. இந்தச் சொல் வேறு எந்தத் தமிழ் நூல்களிலோ, பிற எந்தத் திராவிட மொழிகளிலோ வழங்கியதாகத் தெரியவில்லை. இந்தச் சொல்லை ஆழமாக ஆராய்ந்து பார்த்தால் இச்சொல் அரியதோர் அறிவியல்கலைச் சொல்லாகவே (Scientific terminology) காணப்படுகிறது.

"என்றாழ் நின்ற குன்றுகெழு நன்னாட்டுக்
காடுதீப் பிறப்பக் கனையெரி பொத்திக்
கோடையொடு புகுந்து கூடலாண்ட
வேனில் வேந்தன் வேற்றுப்புலம் படர
ஓசனிக் கின்ற வுறுவெயிற் கடைநாள்"

—சிலப்பதிகாரம்-ஊர்காண் காதை 125

"ஓசனித்தல்—வெக்கையாற் றலையெடுத்தல்; கடைநாள்-வேனிற் பின்னால் கழிகிற நாளிலே; சிந்தாமணியிலும் 'ஓசனிக்கின்ற அன்னம்' என்றார்" என்று சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் விளக்கம் கூறியுள்ளார். அடியார்க்குநல்லார், "கடைநாள்—பருவத்தின் கடை நாள், ஓசனித்தல் போதற்கு ஒருப்பட்டு முயறல்; ஓரோர் தேயத்திற்கு ஒரொரு காலம் மாறி நிகழ்தலின் வேற்றுப்புலம் படரவென்றார்" என்று விளக்கம் கூறியுள்ளார். அரும்பத உரையாசிரியர் குறிப்பிட்ட சிந்தாமணிப் பாட்டில் அன்னம் ஓசனிக்கின்றதாகக் கூறப்பட்டுள்ளது.

"உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்
படர்கதிர்த் திங்க ளாகப் பரந்துவான் பூத்த தென்னு
அடர்பிணி யவிழு மாம்ப லலைகடற் கானற் சேர்ப்பன்
குடைகெழு வேந்தற் கிப்பா லுற்றது கூற லுற்றேன்."

—சிந்தாமணி - முத்தியிலம்பகம் 54.

"முரிகின்ற திரை முத்தைச் சிந்துகையாலே அதற்கு வெருவிச் சிறையடித்துக்கொள்கின்ற அன்னம்" என்று நச்சினார்க்கினியர் இப்பாட்டின் முதல் வரிக்குப் பொருள் கூறியுள்ளார். அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் சிலப்பதிகாரத்தில் கூறிய அரிய சிறந்த உரையை மறந்து

'ஓசனிக்கின்ற அன்னம்' என்ற தொடர்க்கு நச்சினார்க்கினியர் பொதுவாகப் பொருள் கூறியுள்ளார். ஆனால், ஓசனிக்கின்ற அன்னம் என்பதற்கு வெக்கையால் தலையெடுக்கின்ற அன்னம், பருவத்தின் கடைநாள் போதற்கு ஒருப்பட்டு முயலும் அன்னம் என்று பொருள் கூறவேண்டும். வெக்கையென்பது கடும் வெயிலைக் குறிக்கும், கடுமையான வெயிலால் வரும் வேனல் கட்டியை வெக்கை என்று கூறுவது இன்றும் கொங்கு நாட்டு வழக்கமாகும். இவ்வாறு வெக்கையால் தலையெடுக்கின்ற அன்னம் வேற்றுப்புலம் படர்தற்காக அவ்வாறு செய்கின்றது என்பதும் அரும்பத உரையாசிரியர் கூறிய விளக்கத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். இந்த விளக்கம் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னத்திற்கும் பொருந்துமாதலால் அரும்பத உரையாசிரியரே சிந்தாமணிப் பாட்டு வரியை மேற்கோள் காட்டியுள்ளார். அரும்பத உரையாசிரியர் சிந்தாமணிப் பாட்டு வரிகளையும் விளக்கத்தையும் தமது உரையில் பயன்படுத்தியிருப்பதை உரையில் காண்கிறோம். சிந்தாமணிப் பாட்டுகளை நன்கு படித்தறிந்தே சிலப்பதிகாரத்தின் உரையிலும் ஓசனித்தல் என்ற சொற்கு அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் உரையெழுதியுள்ளனர். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் கூறிய உரையைச் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னம் என்ற தொடர்க்குப் பொருத்தினால் விளக்கம் இன்னும் சிறப்பாகத் தெளிவாகின்றது. அன்னம் பருவத்தின் கடைநாள் தனக்குப் புகலிடமாக வேற்றுப்புலம் படரப்போதற்கு ஒருப்பட்டு முயறலையே 'ஓசனிக்கின்ற அன்னம்' என்ற வரி குறிப்பிடுகின்றதை அடியார்க்கு நல்லார் உரை விளக்கத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். அன்னம் எல்லாம் சேர்ந்து போதற்கு ஒருப்பட்டு, அஃதாவது ஒரேமனதாகி, பருவத்தின் கடைநாள் முயலுகின்றன. அடியார்க்கு நல்லார் கூறினதுபோல ஒரோர் தேயத்திற்கு, ஒரொரு காலம் மாறி நிகழ்தலின் வேனில் காலத்தில் இங்கிருந்து குளிர்காலமுடைய வேறொரு தேயத்திற்குச் செல்லவே அன்னம் வேற்றுப்புலம் படர்வதாகக் கொண்டால் விளக்கம் தெளிவாகின்றது.

சிலப்பதிகார உரையாசிரியர்கள் கூறிய உரையை ஒட்டிச் சிந்தாமணியில் கூறிய 'ஓசனிக்கின்ற அன்னம்' என்ற தொடர்க்கு விளக்கம் கூறுங்கால் வியப்பிற்குரிய அரியதோர் அறிவியல் விளக்கம் கிடைக்கின்றது. ஓசனித்தல் என்ற சொல் பறவைகள் புலம் பெயர்ந்து செல்வதையே, வலசை போவதையே (Migration) குறிக்கும் சொல்லாகும் என்பது

தெளிவாகின்றது. வெளிநாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்குக் குளிர்காலத்தில் வரும் பறவைகள் வெயிற்காலம் தொடங்கியதும் வந்த நாடுகளுக்கே திரும்புகின்றன. அடியார்க்கு நல்லார் கூறுவது போன்று தமிழ்நாட்டில் வெயில் காலம் ஆனதும் வேற்றுப்புலமே அப் பறவைகளுக்குப் புகலிடமாகின்றன. திரும்பிப்போகும்போது ஆயிரக்கணக்கான பறவைகள் இனம்இனமாக ஒன்ருகவே கிளம்புகின்றன. அப்படிக் கிளம்பும்போது சிறையடித்துக்கொண்டு ஒன்ருகப் பறக்க முயல்வதையே 'ஓசனித்தல்' என்ற சொல் குறிப்பிடுகின்றது. அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் பறவைகள் புலம்பெயர்தலையே நினைவில் வைத்துக்கொண்டு 'ஓசனிக்கின்ற வுறுவெயிற் கடைநாள்' என்ற சிலப்பதிகார வரிக்கு உரையெழுதினர்களென்று கருதவேண்டியுள்ளது.

சங்க நூல்களிலேயே வெளிநாட்டுப் பறவைகள் தமிழ் நாட்டுக்கு வருவதையும் திரும்பிப் போவதையும் புலவர்கள் பாடியுள்ளனர். பறவைகள் வலசை போவதைச் சங்க காலப் புலவர்கள் தெரிந்திருந்தனர்.

''அழாஅம் உறைதலும் உரியம் பராரை
அலங்கல் அஞ்சினைக் குடம்பை புல்லெனப்
புலம்பெயர் மருங்கில் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகிஅவர்
செய்வினை மருங்கில் செலீஇயரென் உயிரே.''

—அகம். 113.

''சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து''

—நாலடியார் 29.

அகநானூற்றில் 'புலம்பெயர் மருங்கில் புள்ளெழுந்தாங்கு' என்று கூறப்பட்டுள்ளதால் வெளிநாட்டுக்கு வலசை போகும் பறவைகளைத் தெரிந்திருந்தனர் என்பது தெளிவாகின்றது. பறவை தன் கூட்டை ஒழித்து வெகுதொலைவு செல்லுவது போல என்று நாலடியார் பாடல் கூறுவதையும் காணலாம். சிலப்பதிகாரத்தில் 'புலம்பெயர் புதுவன்' என்பதற்கு அரும்பத உரையில் வேருெரு தேசத்தினின்றும் வந்தவன், பரதேசி என்று பொருள் கூறியிருப்பதைக் காணலாம். சிலப்பதிகாரத்தில் 'புலம்பெயர் மாக்கள்' என்பதற்குப் பொருள் கடலோடிகள் என்று அரும்பத உரை கூறுகின்றது. மணிமேகலை, பெருங்கதை ஆகிய நூல்களிலும் இதே சொற்றொடர்க்குப் பல்வேறு நாட்டினர் என்றும் பொருள் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். ஆதலின், புலம்பெயர் மருங்கில் எழும் புள் வெளிநாட்டிற்குச்

செல்லும் புள், கடல் கடந்தும் செல்லும் புள் என்றே பொருள் கொள்ள வேண்டும். இப்படி வலசை (Migration) போவதற்குப் புலம்பெயர்தற்குப் புள் ஒருங்கு எழுதலையே 'ஓசனித்தல்' என்று வரும் சிலப்பதிகாரச் சொல் குறிப்பிடுகின்றது. சங்க காலத்திலேயே வலசை போகும் பறவைகளை நன்கு தெரிந்தே தமிழ்நாட்டுக்கு வரும் பறவைகளை 'விருந்தின் வெண்குருகு' (நற்றிணை 167) என்று கூறினர். அந்தப் பறவைகள் தமிழ் நாட்டில் தங்காது வெளிநாடுகளுக்குச் சென்று விடுவதால் நிலையாத பறவைகள் என்ற பொருளில் 'வம்பப்புள்' (அகம். 181, நற்றிணை 167) என்றும் கூறினர். நம் நாட்டிலேயே தங்கி வாழும் பறவைகளை 'வதிகுருகு' (குறுந் தொகை 5) என்றும் கூறினர். நம் நாட்டிலே வாழ்ந்து முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பறவைகளை (Resident Birds) என்று பறவை நூலார் கூறுவர். வெளிநாட்டிற்கு வலசை போகும் பறவைகளை (Migratory Birds) என்று கூறுவர். இந்த இருவகைப் பறவைகளையும் சங்கப் புலவர்கள் கண்டு கூறி யுள்ளனர்.

"புதப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை" —புறம் 20.

புறநானூற்றுப் பாடலில் புதுப்புள் என்பது வெளிநாட்டி லிருந்து வருவது, பழம்புள் என்பது வெளிநாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்து முட்டையிட்டுக் குஞ்சு பொரித்துத் திரும்பவும் வெளிநாடு செல்வது ஆகியவற்றைக் குறிக்கும். விருந்து, வம்பு ஆகிய உரிச்சொற்கள் தொல்காப்பியர் கூறிய பொருளிலேயே வலசை போகும் பறவைகளுக்கு அடைமொழியாகச் சங்க நூல் களில் வழங்கிவந்ததைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

சிந்தாமணியில் ஓசனிக்கின்ற அன்னம் என்று கூறப்பட்டி ருப்பதிலிருந்து அன்னப்பறவை வெளிநாட்டிற்கு வலசை போகும் என்று கருதினது தெரிகின்றது. அன்னம் என்ற பெயர் ஒருவகை பறக்கும் காட்டு வாத்துகளுக்கு (Wild Ducks) இனப்பெயராகத் தமிழில் வழங்குகின்றது. இந்தக் காட்டு வாத்து இனத்தில் பல பிரிவுகள் உண்டு. பெரும்பாலான காட்டு வாத்து இனங்கள் வெளிநாட்டிலிருந்து வலசையாகத் தமிழ்நாட்டிற்கு வருகின்றன, போகின்றன. நற்றிணை 356ஆம் பாடலிலும் புறநானூறு 67ஆம் பாடலிலும் அன்னங்கள் தென்னாட்டிலிருந்து வடநாட்டில் இமயமலைக்குச் செல்வதாகக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இமயமலையைத் தாண்டிச் சென்று சைபீரியா நாட்டில் தங்கும் அன்னப் பறவைகளும் உள்ளன. சிலவகை அன்னப் பறவைகள் வலசைபோவதைச்

சங்க காலத்திலேயே தெரிந்திருந்தனர். ஆதலின் சிந்தாமணியில் பொருத்தமாகவே அன்னம் ஓசனித்ததாகக் கூறினர். மற்றும் நம் நாட்டிற்கு வலசை வரும் சில இனப் பறவைகள் வெளிநாட்டிற்கு ஒரு குறிப்பிட்ட நாளில் எழுந்து செல்வதாகவும் பறவை நூலார் ஆராய்ந்து கண்டுள்ளனர். சில இனப்பறவைகள் வலசை செல்லும் முன்னல் ஒன்ருகக் கூடிப் பின்னர்ச் சிறகடித்துக் கிளம்புவதாகவும் கண்டுள்ளனர். தகைவிலான் குருவி (தரையில்லாக் குருவி, தலையில்லாக் குருவி) என்ற சிறு பறவை தந்திக் கம்பிகளில் வரிசையாக அமர்ந்து ஒன்ருகச் சேர்ந்து பிற நாடுகளுக்கு வலசை போவதாகக் கண்டறிந்துள்ளனர். ஆதலின் பருவத்தில் கடைநாள் வேற்றுப்புலம் படர்தற்கு எடுத்துப் பார்க்கின்ற, போதற்கு ஒருப்பட்டு முயல்கின்ற - அஃதாவது ஓசனிக்கின்ற அன்னம் என்று கூறியது பறவை நூலார் கண்டறிந்தபடி ஓர் உண்மை யான செய்தியேயாகும். ஓசனிக்கின்ற அன்னத்தைப் பார்த்துத் திங்களாகக் கருதி ஆம்பல் பூத்ததாகச் சிந்தாமணியில் கற்பனையாகக் கூறப்பட்டுள்ளது. கடலை - ஆகாயமாகவும், அன்னத்தைத் திங்களாகவும், முத்துக்களை உடுக்களாகவும் உவமித்துக் கூறினர் என்று நச்சினர்க்கினியர் கூறியுள்ளார். ஆனல் வலசை போகும் அன்னப் பறவைகள் ஆகாயத்தில் உள்ள திங்களின் வெளிச்சத்தையும், உடுக்களின் கதிரொளியை யும் பார்த்தே வழி தெரிந்து வெளிநாடுகளுக்கு வலசை போவதாகப் பறவை நூலார் ஆராய்ந்து கூறியுள்ளனர். ஆதலின் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னம் என்பதற்கு வெறும் கற்பனையாகப் பொருள் கூறுவது பொருத்த மன்று என்பது விளங்குகின்றது. இவ்விடத்தில் சிலப்பதிகாரத் தில் அரும்பத உரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும் கூறிய உரை விளக்கங்களைப் பொருத்தி விளக்கம் காணலே சிறப்பாகும்.

தமிழ்நாட்டின் கடற்கரைக்கும், வேடந்தாங்கலுக்கும், கோடிக்கரைக்கும் இருபதுக்கும் மேற்பட்ட பறவையினங்கள் வெளிநாட்டிலிருந்து வலசை வருவதாகக் கண்டுள்ளனர். உள்ளான் இனங்களும், கடற்காக்கை இனங்களும், அன்னப் பறவை இனங்களும் வலசை செல்லும் பறவைகளுள் முக்கிய மானவையாகும். சைபீரியாவிலிருந்து 4,800 கிலோ மீட்டர் கடந்து, இமயமலையைத் தாண்டிக் காட்டுவாத்து தமிழ்நாட்டு ஏரிகளுக்கு அங்குக் குளிர் காலமாயிருக்கும்போது வருகின்றன. இங்கு வெயில் காலம் தொடங்கியதும் சைபீரியாவுக்குத் திரும்பிவிடுகின்றன.

---

# ஆப்பிரிக்கச் சுற்றுலா

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

(சிலம்பு உக, பரல் உஇன் தொடர்ச்சி)

## 20. வெற்றி விருந்துகள்

நேட்டால் எங்கும் அழைப்புகள், விருந்துகள், ஆர்வக் கூட்டங்கள், இசையரங்குகள், ஆடல் பாடல்கள்—சென்ற இடமெல்லாம் திருவிழாக்கோலம். மக்கள் அன்பு என் உள் ளத்தை உருக்கி விட்டது. சாதி சமய வேறுபாடுகள் பொய்த் தன. மனிதரெல்லாம் இனிது உளமொன்றி வாழலாம் என்ற உறுதியும் உணர்ச்சியும் உள்ளத்தை உந்திப் பிணைத்தன. மேற்கு கிழக்கு என்ற வேறுபாடு கூட இல்லை. இந்தியரும், வெண்மையரும் கூடிய ஒரு கூட்டம் மிகப் பெரிதாக நடந்தது. அதில் மேற்கும் கிழக்கும் என்ற பாட்டை இசைக் கருவிகளுடன் தமிழிற் பாடினேன். ஆட்டமும் தொடர்ந்தது. பிறகு பேசினேன்.

உலகறி வோங்கிடும் மேற்கினிலே—நல்ல
உள்ளறி வோங்கும் கிழக்கினிலே
உலகமும் உள்ளமும் ஒன்றுபட்டால்—உயிர்
ஒற்றுமையாக நிலவிடுமே.
போகம் வளருது மேற்கினிலே—சம
யோகம் வளரும் கிழக்கினிலே
யோகமும் போகமும் ஒன்றுபட்டால் இன்பம்
ஓடிவரும் உயிர் நாடியிலே.

East or west we are one
One united mankind
We are one like rays in sun
One soul in all we find
Under heaven's canopy
We are one cosmic race
Living peaceful and happy
Glowing with devine grace !

Trees are many; grove is one
Shores are many; sea is one
Stars are many; sky is one

Pages are many; books is one
Beings are many; breath is one
Find out this one in the many
And live in cosmic harmony!

ஒன்று வானம் ஒன்றுலகம்
ஒன்றுமாந்தர் கூட்டமே
ஒன்று கடவுள்என்று சொல்லும்
உண்மை எங்கள் நாட்டமே
காற்றைப்போலக் கதிரைப்போலக்
கடலைப்போல மழையைப்போல
ஊற்றைப்போல ஆற்றைப்போல
உலகு பொதுமை உண்மையே.

வடக்கும் தெற்கும் கிழக்கும் மேற்கும்
வட்டவானச் சுற்றுப்போல
தொடுக்கும் பூவின் மாலைபோல
தோகைமயிலின் சிறகுபோல
ஒற்றுமையாய் ஓரினமாய் வாழுவோம்
வெற்றிமுரசு கொட்டிவீரர் முன்செல்வோம்.
ஒற்றுமையாய் ஒருகுலமாய் உலகில் வாழ்வோமே
பெற்றதாயின் பிள்ளைகள்போல் பெட்பு கொள்வோமே.

இப்படிப்பட்ட ஒற்றுமைப் பாடல்கள் உலகப் பாடல்கள் இனிய இசைக் கருவிகளுடன் முழங்கின. நாட்டியமணி ஜெயலட்சுமியின் இசைக்குழு பாட்டுக்கேற்ற ஆட்டம் ஆடி அனைவரையும் மகிழ்வித்தது. கண்ணுக்கும் காதுக்கும் விருந்துடன், நாவுக்கும் நல்விருந்து; மனதுக்கும் மகிழ்விருந்து. எனக்குப் பரிசுகள் குவிந்தன—அத்தனையும் சைவ சித்தாந்த சங்கத்திற்கே தந்துவிட்டேன்.

புதிய பேரகராதித் தொகுதியும், நல்ல விஞ்ஞான நூல்களும் நடராசா திருவுருவுமே நான் எடுத்து வந்தவை. அத்துடன் அன்பர் உள்ளன்பையும் முகந்து வந்தேன். அந்த அன்பை நமது நாட்டிலும் வளர்க்கவே ஆர்வங் கொண்டுள்ளேன்.

ஆடல் பாடல் அமளிகளுடன் பயனுள்ள பல கூட்டங்கள் நாளெல்லாம் நடந்தன. கோயில்களில் மந்திரமாலை சொல்லி வழிபாடுகள் நடந்தன. முதன்மையாக தேவாரப் பாசுரங்களை ஆங்கில மொழி பெயர்ப்புடன் பாடியது தமிழருக்கெல்லாம் தனிச் சிறப்பான விருந்தானது.

எல்லா வுலகமும் ஆனாய் நீயே
ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே
உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிதும் இனியாய் நீயே
தேச விளக்கெலாம் ஆனாய் நீயே

என்று வரும் அப்பர் தேவார அடிகள் எல்லார் உள்ளத்தையும் ஈர்த்தன.

Unlque universal Lord!
All the world Thou art
Sound and word Thou art
To speak of Thee how sweet!
O! Light of nations hail!

Mystic Treasure (திருவருட்செல்வம்) என்ற நூலாகத் தமிழில் உள்ள அருட் கருவூலத்தை மொழிபெயர்த்துள்ளேன். புரவலர் உதவினால் நூல் வெளிவந்து உலகிலே பரவும்!

இணைந்து வாழ்வோம்

தென்னாப்பிரிக்காவில் முதன்மையான அறிஞர் கூட்டம் ஒன்று கூடியது. அதில் தமிழரும், வடநாட்டாரும் ஜூலுக்களும், இஸ்லாமியரும், கிறித்துவரும் கலந்து பேசினர். நான் ஒருமணி நேரம் ஆங்கிலத்திற் பேசினேன். அதன் சுருக்கமாவது:

இங்கே தென்னாப்பிரிக்காவே கூடியுள்ளது; இந்நாட்டைத் தேன் பொழியச் செய்தது இந்தியரின் முதன்மையாகத் தமிழரின் இரத்தப்பாடுதான். இங்குள்ள தமிழரும் மற்ற இந்தியரும் இங்கேயே பிறந்து வளர்ந்து, இந்த நாட்டின் பண்பாட்டுடன் ஒன்றிக் கலந்து போயினர். எல்லாரும் ஒருகுலமாக, ஒருமையுணர்வுடன், ஒரே மனிதர் குழுவாக வாழவேண்டிய முறைகளை ஆராய்ந்து, நடப்போமாக. அவரவருக்குரிய பண்பாடுகளையும், மொழி நயத்தையும், சமயச் சிறப்பையும் போற்றி, எல்லாருக்கும் நலமான சமயோக வாழ்வு வாழ்வோமாக. நாம் துண்டு துண்டாகச் சிதறிப்போகாமல், ஆப்பிரிக்காவில் ஆப்பிரிக்காவுக்காக, மனித சமுதாய முன்னேற்றத்திற்காக வாழுவோம், அன்பு சூழுவோம்! ஓம்.

HAIL COSMIC RACE

Friends, I am happy to address this representative gathering of S. Africans. I have gone round this country so

green, so fertile, so rich is gold and diamonds and material wealth and so anxious to keep pace with the progressive timespirit. I met the Whites, the coloured, Bantus and Indians and they are conscious of being the equal sons of the soil and they must be so. We cannot be single; We must mingle if we are to live in the scientific age as one human race.

The African community must not be torn to pieces by labelled group mentalities. The fear complex, separative egoism, race pride, colour prejudice and all past nuisance must yield to the unique idea of a collective cosmic race conscious of the human soulhood.

We cannot face the nuclear holocaust threatening the world with a total extinction unless we bring brighter light of spiritual socialism (Sama Yoga) for a collective existence conscious of the One soul breathing in all. Let us set aside race and colour pride, menias of caste and religion, infra ans supra digs, let us remove the tension of draconian laws that tyranise fundamental unity and get together tosolve the riddle of this nuclear age heading towards a despairend of to be or not to be.

Tamilians and Indians in this country have left their native soil and have become children of this green soil enriched by their sweat and blood. They must be given civic rights enjoyed by the whites, Japs, Chinese and they must be made to feel one with the Bantus who are sons of the soil. You were divided yesterday by mental and mdterial idea synchracies; but to day when the world has come near you by scientific advancement, you must live as one cosmic race knit in the soul that is the all. We must develop the thinking brain add feeling heart must promote a binding force which create unity of consciousness. Yoga and Scien are the two forces that more the turbine of soulful harmony. Yoga for spiritual dynamism and science for material welfare can give humanity an integrated harmony of collective existence by the following means:

1. A sound modern scientific and Yogic education must be given to all.

2. Every hand must work and live sharing the fruit of work with all.

3. The wealth of all must be spent for the good of all.

4. We must cultivate social efficiency and economic sufficiency and cultural proficiency.

5. English can be developed as common language and every group can promote its mothertongue and enrich opportunities of mutual contribution to the common good of all.

6. The Government must assure security of tenure to all people of this soil as they are today. None must be driven from pillar to post. According to their abilities they must be given liberal opportunities of commercial, industrial and cultural development.

7. Through dramas, films, and cultural activities, through friendly courtesy, common prayers we must put forth a united front wich augures well for the future hevery individual in the cosmic collectivity. Prosper All.

இந்தப் பேச்சு தலையங்கத்துடன் இதழ்களில் வந்தது. வானொலி அழைத்தது. பத்து மணித்துளிகள் உரையாடல்; எனது சமயோக சாதனம் பற்றிப் பேச்சு—முடிந்ததும்—சைவ சித்தாந்த சங்கத்தார் பெருங் கூட்டத்திற் பேசினேன். என்மனம் நிறைந்தது. இப்படிப்பட்ட வாய்ப்பு எங்கே வந்தாலும் இனிது! என் கடன் எல்லாரும் இன்புறப் பணி செய்வதே!

இனி என்ன; இதோ விமானம் அழைக்கிறது; நண்பர் கூட்டம் நமச்சிவாய முழக்குகிறது! பிரியாவிடை! அன்பு நெகிழ்ச்சி! உருக்கமான கண்ணீர்.

ஓம் ஜோதி ! ஓம் நமச்சிவாய ஓம்
ஓம் சிவ ஓம் ! சுத்த சக்தி ஓம்

ஒன்று வானமே! ஒன்று பூமியே
ஒன்றுயிர்க்குயிர்! ஒன்று மானிடம்
என்று வாழுவோம் நன்று வாழுவோம்
அன்பு வழியிலே அறம் பொலியவே
இன்பு குழுவே எல்லாரும் வாழுவோம்.

Sing happy hails! Love never fails!
In soul unite all kind play your role
We live in God and God lives in us
Life is a kiss of his tender kiss

Nama : Sivaya Aum
Nama : Sivaya Aum!

விமானம் ஏறுகிறேன். சுத்தானந்தர் வாழ்க! எல்லாரும் வாழ்க! என்ற முழக்கம் இங்கும் அங்கும்.

ஹரஹரஹரஹர....சிவசிவசிவசிவ...விமானம் பறக்கிறது. என்னை இவ்வளவு அன்புடன் வரவேற்ற நாட்டின் அழகை உருப்பெருக்கியால் பார்த்துக்கொண்டே ஜோஹான்ஸ்பர்கு சென்றேன். அங்கே பாலாஜீ, நடேசர், வடநாட்டார் தென்னுட்டார் அனைவரும் வரவேற்றனர். காலை பத்து மணி முதல் மாலை நான்கு மணி வரையில் அன்புப் பேச்சு, அருள் முழக்கம், ஆர்வத்தின் உருக்கம்!

இதோ மோரிஷஸ் விமானம் அழைக்கிறது - அன்பருக்கு நன்றி கூறி ஏறுகிறேன். ஹரஹரஹரஹர! சிறகடிக்கிறது! பறக்கிறது! அழகான மலைக்காட்சி, கடற்காட்சி! எத்தனையோ ஊர்களை ஊடுருவி விமானம் மூன்று மணி நேரத்தில்—ஹரஹரஹரஹர! மோரிஷஸ் தீவில் இறங்கியது—இந்தப் பசும்பொன் அழகுத் தீவில் பத்து நாட்கள் பயனுறச் சுற்றித் தாய்நாடு சேர்ந்தேன். (தொடரும்)

———

## எத்துணைப் பேதைமை!

நிலையில்லா வாழ்வினராகிய மக்கள் இவ்வுலகியற் பொருள்களின் பொருட்டும் இவை கொண்டு நுகருஞ் சிற்றின்பத்தின் பொருட்டுந் தம்முட் பகை பாராட்டி, இச் சிறிய வாழ்க்கையிலும் நெடுக அல்லல் உழப்பது எத்துணைப் பேதைமை! என்று நினைந்து பார்க்கப் பார்க்க எல்லோரையுந் தம்முடன் பிறந்தவராகக் கருதி, எல்லார் மாட்டுங் கனிந்த உள்ளத்தினராய் இன் சொற் பேசி யொழுகும் பழக்கம் எளிதிலே எவர்க்கும் கைகூடு மென்க.

—மறைமலையடிகள்
இளைஞர்க்கான இன்றமிழ். பக் கசச.

## வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணியடிகள் வரலாற்றிற் சுவையான நிகழ்ச்சிகள்:

### 7. பார்ப்பன அம்மை பரிவுடன் உணவிடல்

[தி. சே. முருகதாச அடிகள்]

தண்டபாணியடிகள், தமிழ்நாட்டில் பல இடங்களிற் சென்று, ஆங்காங்குள்ள கடவுளர்மீது, சமய வேறுபாடின்றி, ஒவ்வொரு மூர்த்தியையும் சிறப்பித்துப் பாடுவதுண்டு. அப்படிப் பட்ட சமயமொன்றில் தேவகோட்டைக்கும் சென்று பல பாடல்கள் பாடியுள்ளார். அங்கிருந்து வேற்றூர் செல்கையில் நெடுங்குளம் என்ற ஊரையணுகினர். அவ்வூரினர் வண்டி ஏற்பாடுசெய்தனுப்புவர். சில சமயம் நடந்தும் செல்வர். அப்படி வண்டியில் ஏறிவந்த சமயம் ஒன்று உச்சிநேரமாயிற்று. அவணிருந்த குளமொன்றில் நீராடினர். நியம வழிபாடாற்றினர். உணவுக்குரிய இடம் நாடினர். அவ்வூரில் அந்தணர் வாழும் வீடுகள் நான்கேயிருந்தன. அவை வடக்கு நோக்கியிருந்தன. வீதி வழியே அவ்வீடுகளை நோக்கிச் சென்றனர் அடிகள். ஒவ்வொன்றும் எப்படியிருந்தது? நிகழ்ந்தது என்ன? கூறு கின்றனர். படம் பிடித்துக் காட்டுவதுபோல் உள்ளன.

ஒரு வீட்டின் முகப்புத் திண்ணையில் வாலிப மிடுக்குள்ள அந்தணர் சிலர் இருந்து வீதிவழி செல்லுமிவரது திருவேடச் சிறப்பைக் கண்டு, கேலி செய்து தமக்குள் பேசி நகையாடினர். அவரிடம் பேச மன எழுச்சியில்லை. இரண்டா வது வீட்டினுள் மகள் ஒருத்தி மகப்பெறும் வேதனையில் இருந் தாள். போவாரும் வருவாரும் கண்கலங்கியிருந்தனர். அதுவும் கடக்கப்பட்ட நிலையில் மூன்றாவது வீட்டை நோக்கினர். வீடு மூடப்பட்டுப் பூட்டப்பட்டு இருந்தது. நான்காம் வீட்டை நாடினர். வீட்டிலுள்ள அம்மையார் இதுவரை உணவு தேடிவரு பவர் யாரையும் காணவில்லையே என்ற நோக்கத்துடன் வெளியே வந்துகொண்டிருந்தாள். அடிகளும் பார்த்தனர். அடிகள் பார்வைக்கு அம்மையார் நிலை அம்பிகைபோற் காணப்பட்டது. சற்றுத் தயங்கிநின்றனர். அவ்வம்மை அடிகளை நோக்கி, சுவாமி என்ன பார்க்கிறீர்கள்? என்றாள். 'பசியால் துன்பப்படும் நான் இந்த வீதியில் உள்ள நிலைகளைக் கண்டு வருகின்றேன்' என்ற னர். வருக என்றழைத்து, முகமலர்ச்சியுடன் வீட்டில் உள்ள உணவை அன்புடன் இட்டனள். தேவருலக அமுதைவிட அவ் வுணவும், அம்மையின் பரிவும், மனதைப் பரவசப்படுத்தின;

உண்டனர்; கைகால் அலம்பினர். தம்மிடமுள்ள பணத்தில் அவ்வுணவின் விலையாகத் தர முயன்றனர். இலவசமாக உண்ண அடிகள் கருதவில்லை.

இதைக் கண்ட அவ்வம்மை, 'என்ன இது, விலை பெறுதற்கு உணவு தரவில்லை; என்னையேற்ற கணவனுர், தங்களைப்போல வரும் அடியவர்கட்கு நம் இல்லத்தில் உள்ள உணவை நான் இல்லாத சமயமாயிருந்தாலும், பசிக்கு உணவு படை என்று கூறினர். அந்தக் கடமையைக் கருதி உணவிட்டேன். நேரமாயிற்றே என்றெண்ணி வெளியே வந்தேன். தாங்களும் வந்தீர்கள்' என்று கூறினள். அன்பு கலந்த மொழியைக் கேட்ட பின் 'இக்காலத்திலும் இத்தகைய அந்தணரும் உள்ளார்களே' என்று வியந்தனர். 'சரி வேறு இடம் போகிறேன், விடை தருக' என்றனர். அம்மையார் 'இரண்டு ஐயங்கள் என் மனத்தில் உள்ளன. அவற்றுக்கான விடை கூறித் தெளிவு படுத்த வேண்டும்' என்ருள். அடிகள் கூறுவார், 'இறைவன் என் உணர்வில் விளக்கப்பட்ட ஏதாயினும் தடையில்லை' 'என்ன ஐயம்' என்றனர்.

1. ''இவ்வுலகமும், வானுலகமும் நாளும் அறம் என்று உயர்வுபடக் கூறுவதன் உண்மை வடிவம் யாது? 2. மேலான கடவுளிடம் அன்பு செய்வோர் எதை உயர்வாகக் கேட்டுப் பெறுதல்வேண்டும்'' என்றனள். உடனே அடிகள், 1. ''உயிர்கள் யாவும் ஒரே நிலையின ஆதலின் எவ்வுயிரும் தன்னை ஒப்பன எனக் கருதி இயன்ற உதவியைச் செய்தல் வேண்டும். அதுவே அறத்தின் உண்மை வடிவம். 2. நாம் எடுத்த இவ்வுடலுடனேயே மறுபிறவி யெடுக்காதபடி இறைவன் திருவருளில் ஒன்றுபடக் கலக்கும் வீடுபேறே இறைவன் தரும் பெரிய பேறு'' என்றனர். சரியென்று ஒப்பி விடை தந்தனள். அடிகள் விடை பெற்று வெளியே வந்தனர். இவருள்ளம் வியப்பில் அமிழ்ந்தது.

''நெடுங்குளத்திற் பார்ப்பதியை நேராம்ஓர் அம்மை
கொடும்பசியைத் தீர்க்கும் குணத்தாள்—இடும்பரிசு
வேண்டாதாள் உண்மை விவேகம் மிகவுடையாள்
ஆண்டான் அருளே அவள்''

என்ற வெண்பாவை ஓதினர்.

''பார்ப்பதியை நேராம் ஓரம்மை; ஆண்டானருளே அவள்'' என்று இருவகையாக அவ்வம்மையைக் கூறிய சிறப்பும், விவேகம் மிகவுடையாள் என்றதில் அவ்வாறு கேட்ட இரு வினைக்களின் உயர்வையும் புலப்படுத்திய சிறப்பும் சிந்திக்க

வுள்ளன. இதுவரை இராவணன், சூரன் முதலியோர்களும் அரும்பெருந் தவஞ்செய்து பெற்ற பேறுகளும் கூட ஒரு காலத்தில் அழியக்கூடிய போகப் பயனேயாய்க் கழிக்கப்பட்டவையாயின. உயிருக்கான பயனேதுமில்லை. உயிர் இறைவனிடம் பெறும் பயன் பிறப்பற்ற வீடுபேறு ஒன்றே யென்பது அவ்வம்மையிடம் அடிகள் கூறிய விடையில் அமைந்துள்ளது. அது அவ்வம்மையின் கருத்துக்குச் சிறப்பாயிருந்தது. மேலும் அறமென்று செய்யப்பட்ட, சத்திரம், கோயில், குளம், சாலை முதலியவையும் கூடக் காலப்போக்கில் கவனிப்பாரற்றுப் பாழ்பட்டு அழிவதைக் காண்கின்றோம். தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஒன்றைக் காண்கின்றோம். அதைக் கட்டிய இராசராசசோழன் ஆர்வமும் பணியும் எப்படியிருந்திருக்கிறது? தென்காசிக் கோபுரம் அமைத்த பராக்கிரம சோழன் பணி எத்தகையது? எத்தனை கோயில்கள் சிறப்பற்றிருக்கின்றன. சத்திரங்கள் எத்தனை சிதைவுற்றன. இவையெல்லாம் நிலையற்றவை யாயின. தன்னுயிர்போல மன்னுயிரும் என்ற பேருண்மையோடு பரிவு அமைவது ஒன்றே உயர்வு. அவற்றுக்கு ஏற்றவாறு உதவுதலே அறமென்பது. அறத்தில் உயர்வென்பதும் காண்கிறோம். ''அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி'' என்பர் வடலூரடிகள். இவ்விரு வினாக்கட்கும் விடைகாண முயன்ற அவ்வம்மையை ''விவேகமிகவுடையாள்'' எனக் கூறியது எவ்வளவு சிறப்பைத் தருகிறது.

அடிகள் உணவை உண்டதும் பசி தீர்ந்ததேயென்ற ஒன்றை எண்ணாமலும், இலவசமாக உண்ணாமல் விலைதர முயன்றதும் ஆகிய அடிகளது மனநிலையைக் கருதி மகிழலாம். அடிகள் திருவுரு மறைந்த இன்றைய காலக் கணக்குப்படி பார்த்தால், 90 ஆண்டுகட்கு மேல் உள்ளதாகும். ''இக்காலத்திலும்'', என்று அந்தநாளிலேயே காலக் கொடுமையை எண்ணி அடிகள் வருந்தியதறிகின்றோம். பொதுவாக மக்களிருப்பினும் அந்தணருள் இப்படி அடியவர்மீதன்புள்ளவராய் இனபிமானத்தையும் கடந்த அன்புள்ளவராய் மணந்த அந்தணருக்கேற்ற, இல்லறப் பண்புள்ள மனைவியாய், அவ்வம்மையிருந்த பண்பும் நினைக்க நினைக்க வியப்பூட்டுவதாகும். என்றோ ஒருகால் கணவர் கூறிய மொழியைச் சிந்தையிற்கொண்டு' வந்தால் 'தருவோமென்று அசட்டையாயிராமல், காலம் கடக்கிறதே, அடியவர் வரவில்லையே என்ற சிந்தனையுடன் வீதியை நோக்கி வந்த அம்மையை, 'பார்ப்பதியை நேராம் ஓரம்மை' என்று புகழாமல், வேறு எப்படி அடிகள் கூறுவார்கள்? பின்னும் இரண்டு வினாவைக் கேட்டதும் ''ஆண்டானருளே அவள்'' என்று

தேற்றேகாரத்துடன் முடித்த அருமையும் பெருமையும் மிக மேலானவை யாகும். இத்தகைய நிகழ்ச்சி குடும்ப வாழ்க்கை யுடையார் ஒவ்வொருவரும் கைக்கொள்ள வேண்டிய ஒன்ருகும். இவ்விவரத்தை ஏழு பாட்டுக்களாற் கூறியுள்ளதைக் காண்க.

(1) மேவும்அந் நெடுங்குளத் தூரில்
வண்டிவிட் டிறங்கி முழுகிநீ றணிந்து
மணிவடம் புனைந்துகே ளசைத்துத்
தண்டிலங் கியகை யொடுபிரா மணர்தம்
தனித்தெருத் தேடிஅத் ததிக்காம்
உண்டிவேட் டுற்றேன் அங்குநான் மனையே
உத்தரம் பார்த்திருந் தனவே.

(2) ஒன்றினில் விடப்பார்ப் பார்சில ரிருந்(து) என்
உருவுகண் டொருங்குநக் ககழ்ந்தார்
ஒன்றினில் ஒருத்தி மகப்பெறும் நிமித்தம்
உற்றவர் பலரும்நொந் துழன்றூர்
ஒன்றினில் உள்ளார் அனைவரும் வெளிப்பட்டு
ஒருபெரும் பூட்டும்இட் டிருந்தது
ஒன்றினில் இருந்துஓர் சுமங்கல மடவாள்
உமையவ ளேயென வந்தாள்.

(3) வந்தவள் எனைப்பார்த்(து) என்னினை வின்றாய்
மனக்குறிப்பு யாதெனக் கேட்டாள்
வெந்தகைப் பசிநோய் தீர்கைவேட்(டு) இந்த
விதங்கள்ஓர் கின்றனன் என்றேன்
செந்தகைக் கமல முகமலர்ந் தழைத்துத்
திருத்தியாய் இருந்தன படைத்தாள்
அந்தரத் தமரர் அமுதினும் அதுமேல்
ஆமென அருந்தினன்; அன்றே.

(4) உண்டபின் அதற்காம் விலையிட முயன்றேன்
விலைகுறித்(து) உணவிட விளைற்
கொண்டவன் இனையார்க்கு அமுதிடு மாறு
கூறியுள் ளான்எனப் பகர்ந்தாள்
கண்டன மொழிகேட்(டு) இத்தகைப் பனவர்
களும்உளார் கொல்என மகிழ்ந்து
மண்டலத் தினிஓர் ஊர்புகல் குறித்தேன்
அனுப்பென்றேன் மயிலனுள் உரைப்பாள்.

(5) ஐயமென் உளத்தில் இரண்டுள, அவைதீர்த்து
அகமகிழ் வுறச்செய்(து)ஏ கென்றாள்
உய்யநான் உணர்ந்த உணர்ச்சியில் அகப்பட்டு
உளஎனில் உரைசெய்வேன் என்றேன்

''வையமும் வானும் தினம்புகழ்-அறத்தின்
வடிவம்யாது யாவையும் வல்ல
மெய்யருட் கடவுட் கருதினர் பெறலுள்
விழுப்பொருள் யாது''எனக் கேட்டாள்.

(6) 'தன்னைநேர் உயிர்கட்(கு) இதம் செய்யும் அதுவே
தருமத்தின் சத்திய வடிவம்
பின்னைஓர் வயிற்றிற் புகவிடாக் கதியே
பிரான்தரும் பெரியபேறு என்றேன்'
மின்னைநேர் இடையாள் விடைகொடுத் திட்டாள்
வியப்பெனை விழுங்கிய(து) இனைய
அன்னைமார் தாமும் உலகினில் உள்ளார்
எனமகிழ்ந்(து) ஊர்ப்புறத் தாகி,

(7) ''நெடுங்குள மதிலோர் கவுரிநேர் அம்மை
நிகழ்பசி நீக்கும்நன் நீராள்
இடும்பரி சேற்காள் மெய்யறி வுடையாள்
இறையரு ளேஅவள்'' எனும்சொல்
தொடுங்கவி யுரைத்துஓர் சீட்டினில் வரைந்து''

என விளக்கமாக விளம்பியுள்ளனர். அடிகள் அவ்வம்மையின் கணவர், 'நம் வீடு தேடி வருகின்ற அடியவர் உண்ணும்படி உணவு தருக' என்று கூறியதைக் கேட்டபோது, 'இத்தகைப் பனவர்களும் உளர்கொல்' என மகிழ்ந்து கூறினர். இரு வினாக்களை வினவிடை கேட்டுத் தெளிவுபெற்ற அம்மையாரை ''இனைய அன்னைமார் தாமும் உலகினில் உள்ளார்'' என மகிழ்ந்து கூறினர்.

அதே நேரத்தில், விடப்பார்ப்பார் சிலர், அடிகள் தவவேடத்தைக் கண்டு இகழ்ந்து நகையாடியதையும் கூறினர். இத்தகைப் பனவர் என்ற இடத்தில் இவர்களை வைத்து விடப்பார்ப்பார் என்ற சொல்லுக்கு விடம்போன்ற பார்ப்பார் எனவும் கொள்ள இடம் தருவது காண்க.

கணவன் மனைவியென்ற இருவரது தூயவுளப் பண்பை அறிய ஒரு வாய்ப்பாயமைந்தது இது. கணவன் வீட்டில் இல்லாத போதும் அவன் சொல்லைக் குறிப்பாகக் கொண்டு, தானே தேடிவந்தவர்க்கு உணவு அளித்த அருமை பெருமைக்குரியது; இதை அம்மை முன் கூறினால் முகமனாகும். தனித்திருக்கும் அவரிடம் கூறுவது முறையன்று. தான் அவ்வியப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. பாட்டையெழுதிப் பசு மேய்ப்பவரிடம் கொடுத்தேகினர். இது துறவுக்கும் பண்பாட்டுக்கும் ஏற்ற கடமையாயிற்று. இப்படி நிகழ்ந்தன பல நிகழ்ச்சிகள். அடுத்து இதுபோன்ற சில காண்போம்.

———

# ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்

[புலவர். போ. முனியப்பன்.]

**நுழைவாயில்**

பதிற்றுப்பத்தின் ஆறும்பத்திற்குரிய தலைவன் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் என்னும் ஆற்றல்மிகு வேந்தன். இச் சேரலாதனைச் சிறப்பித்துக் கூறும் அடைமொழி 'ஆடுகோட் பாடு' என்பது. இவ்வடை மொழிக்கு எல்லோரும் ஒரே கருத்தையே பின்பற்றியுள்ளார்கள். எவரும் இவ்வடை மொழியின் உண்மையை உள்ளவாறு நோக்கவில்லை. அதனை நோக்கி ஆய்ந்துரைக்கவே இக்கட்டுரை எழுந்தது.

**எல்லாம் பிழை!**

சேரலாதன் பெற்றுள்ள சிறப்பு அடைமொழியான 'ஆடு கோட்பாடு' என்ற சொல்லிற்கு உரைவேந்தர் ஔவை சு. துரைசாமி, தென்கலைச் செல்வர் உ. வே. சா., மு. இராக வையங்கார், புலவர் கா. கோவிந்தன் ஆகியோர் முதல், இம்மன்னன் பற்றி இன்றுவரை எழுதியுள்ள யாவரும் ஒரே கருத்தைத்தான் தெரிவித்துள்ளனர். அஃதாவது, பகைவர்கள் கவர்ந்து சென்ற ஆடுகளைத் 'தண்டகாரண்யக் காடு' வரை சென்று மீட்டுக் கொண்டு வந்ததால் தான் இப்பெயர் பெற்றான் எனக் கூறியுள்ளனர். இது முற்றிலும் பிழை என்பதே என் பணிவான கருத்து. இதனைப் பின்வரும் பத்திகளில் ஆய்வு செய்வோம்.

**ஆடா? ஆவா?**

மேற்கூறிய கருத்தன்றி, ந. சி. கந்தையாப் பிள்ளை, சு. அ. இராமசாமிப்புலவர் ஆகியோரும், சேரன் வஞ்சி என்ற நூலின் ஆசிரியரும், 'ஆடு' கோட்பாட்டுச் சேரலாதன் என்பதை. 'ஆ' கோட்பாட்டுச் சேரலாதன் எனக்கொண்டு, பகைவரால் கவர்ந்து செல்லப்பட்ட ஆநிரைகளை (பசுக் கூட்டங்களை) மீட்டு வந்ததால் 'ஆடு' கோட்பாட்டுச் சேரலாதன் எனப் பெயர் பெற்றான் என்று குறிப்பிட்டுள்ளனர். இஃது எவ்வாறு பொருந்தும்?

'ஆடு' என்ற சொல்லை 'ஆ' எனக் கொள்வதற்கு எந்த இலக்கண நெறி இடங்கொடுக்கிறது? மேலும், இதில்

இன்னொரு வியப்பு என்னவென்றால், தமிழ் வளர்ச்சிக்கழகம் வெளியிட்டுள்ள 'கலைக்களஞ்சியமும்' தமிழ்ச்சங்கம் வெளியிட்டுள்ள 'சிறப்புப் பெயர் அகராதியும்' இக்கருத்தை ஏற்று, "பசுக்" கூட்டங்களை மீட்டு வந்ததால் இம் மன்னன் 'ஆடு' கோட்பாட்டுச் சேரலாதன் எனப்பட்டான் என்று குறிப்பிடுகின்றன. இத்தகைய பெருமயக்கம் எதனால் ஏற்பட்டது? ஆடு பற்றிய உண்மையை அறியாததால்தான். அதனை இனி நாம் அறிவோம்.

**ஏற்றமா? இழிவா?**

ஆட்டை மீட்டுக்கொண்டு வருதல் சிறப்பிற்குரிய தன்று என்று கருதித்தான் 'ஆடு' என்ற சொல்லை 'ஆ' எனக் கொண்டனர் போலும்! அவ்வாறாயின் 'ஆ'கோட்பாட்டுச் சேரலாதன் என்றல்லவா பெயர் அமைத்திருக்க வேண்டும்? இவ்வண்ணம் எவ்விடத்தும் குறிக்கப்படாததால் ஆட்டை 'ஆ'வாகக் கொள்ளுதல் தவறே.

'ஆ'வை மீட்டுவரும் செயலைப் பற்றித்தான் இலக்கண இலக்கியங்கள் உள்ளனவே யன்றி ஆடுகள் பற்றி அவ்வாறு இல்லையே. மேலும், இம்மன்னன் பெற்ற அடைமொழியை 'ஆடு' என அப்படியே கொண்டால் ஏற்றமின்றி இழிவையன்றோ தரும் எனக் கருதலாம். ஆனால் உண்மை அவ்வாறில்லை. ஏனென்றால், இம் மன்னன் பெற்ற ஆடு என்ற அடைமொழிச் சொல் நாட்டில் வாழும் ஆட்டைக் குறிக்கவில்லை. உயர்ந்த மலையாம் ஓங்கலில் வாழும் 'வருடை' என்னும் மலையாட்டைத் தான் குறிக்கிறது.

இதற்கு என்ன சான்று எனின்; ஆறும் பதிகத்தின் மூன்றும் வரி 'தண்டகாரண்யத்துக் கோட்பட்ட வருடையை.......' என்றன்றோ குறிக்கின்றது. பழைய உரையும் வருடை என்பதற்கு 'மலையாடு' என்று தெளிவாகவே உரை கூறுகிறது. எனவே, இம் மன்னன் எவரும் எளிதிற் கொள்ளற்கரிய மலையாட்டைக் கொண்டு வந்ததால்தான் 'ஆடு' என்ற சொல்லை அடைமொழியாய்ப் பெற்று ஏற்றமுற்றான்.

**கொள்ளையா? கொண்டதை மீட்டதா?**

ஆடு என்ற அடைமொழி அம் மன்னனுக்குச் சிறப்பைத் தான் தருகிறது என்பதற்குச் சிறந்த சான்று, அச் சொல்லை அடுத்துவரும் கோள் என்னும் சொல்லாகும். கோள் என்றால் கொள்ளுதல் அல்லது கொள்ளல் என்றுதான் பொருள்.

ஆனால், எல்லாரும் இச் சொல்லிற்கு மீட்டல் என்றே பொருள் கொண்டுள்ளனர். அது பொருந்தாது.

ஏனெனில், முதற்கண் வெட்சித்திணை மறவர்களைக் கவர விட்டுவிட்டு, அதன் பின் சென்று மீட்டு வரும் (கரந்தைத் திணைச்) செயல் உயர்த்திப் பாராட்டுவதற்குரிய அரிய செயல் அன்று. ஒன்று, அரிய செயல் அல்லாதபோது அதன் அடிப்படையில் சிறப்புப் பெயர் அமையவும் வழி இல்லை. இரண்டாவதாக, வருடை என்னும் மலையாடுகளை ஒரு சிலர் அக்காலத்தில் வளர்த்தனர் என்றாலும், மந்தையாகப் பெருகும் அளவிற்கு வருடைகள் நாட்டில் வாழவில்லை. எனவே, வருடையாட்டுக் கூட்டத்தைப் பகைவர் கவர்ந்து செல்லும் வாய்ப்புக் கிடையாது. மூன்றாவதாக, சேர நாட்டில் (கொங்கு நாடு நீங்கலாக) ஆடுமாடுகள் அன்றும் குறைவு. இன்றும் குறைவுதான் (தமிழ் நாட்டிலிருந்து அரிசி கடத்தப் படுவதைப் போல ஆடுமாடுகளும் கடத்தப் படுகின்றன என்பதை இன்றும் செய்தித் தாளில் காண்கிறோம்.)

எனவே, சேரலாதன் பகைவர் கொண்டு சென்ற ஆடுகளை மீட்டு வரவில்லை. தன் நாட்டில் இல்லாத (அல்லது குறைவாக உள்ள) ஆடுகளை மிகுதியாக்கக் கருதினான். அதற்காக, எளிய நாட்டாடுகளைக் கொணர்தல் தன் தகுதிக்குப் பெருமை யாகாது என்று முடிவு செய்து, புதிதாகத் தண்ட காரண்யக் காட்டிற்குச் சென்று பிடித்தற்கரிய வருடை ஆடுகளைப் பிடித்துக்கொண்டு வந்தான். அதனால் சிறப்புப் பெற்றான்.

ஆட்டைப் பிடித்தல் அரிய செயலா ?

ஆம் ! வருடை என்னும் மலையாட்டைப் பிடிப்பது அரிய தினும் அரிய செயலே. ஏன் ? அது வாழும் இடத்தைப்பற்றிக் கழக (சங்க) இலக்கியங்கள் காட்டும் காட்சியைப் பாருங்கள்.

'செல்வரைச் சேக்கை வருடை...' —குறுந்தொகை 187.

'நெடுவரை மிசையது குறுங்கால் வருடை' —ஐங்குறுநூறு 287.

'வேறுவே றினத்த வரைவாழ் வருடை' —அகநானூறு 378.

'மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடை...' —பட்டினப்பாலை 138-139.

'வழைவளர் சாரல் வருடை நன்மான்' —கலித்தொகை 50.

'மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்
வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர்'
—மலைபடுகடாம் 502-503.

'போருடை வருடையும் பாயாச்
குருடை அடுக்கத்து......' நற்றிணை 359.

செங்குத்தான மலையிலும், மலை உச்சியிலும் வாழக் கூடியது இவ்வாடு. வருடை செல்லும் செங்குத்தான சரிவுகளை அடைவதே நமக்கு அருஞ்செயலாகும். பாறைக்குப் பாறை தாவி விரைந்து மறைந்து விடும் இயல்புடையது இது. இத்தகைய ஆட்டைப் பிடித்து வருதல் எளிய செயலாகுமா?

**விலங்கியல் கூறும் விளக்கம்**

நுண்மாண் நுழைபுலம் மிக்க அறிவியற் புலவர் திரு. பி எல். சாமி அவர்களால் எழுதப்பட்டு, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள 'சங்க இலக்கியத்தில் விலங் கின விளக்கம்' என்னும் நூலின் வழி வருடை ஆட்டின் அருமை பெருமைகளை அறிந்து கொள்ளலாம். அந் நூலில் அவர் காட்டிய கருத்தைப் பின்பற்றியே இக்கட்டுரை எழுதப் பட்டுள்ளது.

இவ்வாடுகள் உயரமான மலைகளில் 4,000 அடி முதல் 6,000 அடிவரை உள்ள பகுதிகளில் காணப்படும் என்றும்; இவ்வாடுகள் ஓர் உச்சியினின்றும் (சிகரத்தினின்றும்) அடுத்த உச்சிக்குத் தாவும் என்றும்; அவ்வாறு பாயும்போது கீழே விழாதபடி அதன் கால்கள் பாறையைப் பிடித்துக் கொள்ளும் என்றும்; முகிற் கூட்டங்கள் உலவும் மலை யிடத்தே மறைந்து விடும் என்றும்; வேட்டெஃகத்தாலும் (துப்பாக்கியாலும்) இதனைச் சுடுவது இயலாது என்றும்; மிகுந்த பாதுகாப் புணர்ச்சி உடையது என்றும்; விலங்கியல் நூல் விளக்குகிறது. மேலும், பிடித்தற்கரிய இதன் அரிய இயல்புகளை மேற்குறிப் பிட்ட நூலுள் தெளிவாகக் காணலாம்.

இத்தகைய பேராற்றல் மிக்க இவ்வாடுகளை மிகுதியாகக் கொண்டுவருதல் என்பது எளிய செயலா? இவற்றின் இயல்பை யெல்லாம் உணர்ந்து, தகுந்த முறையில் திட்ட மிட்டு, கடும் முயற்சிக்குப் பின்னல்லவா இவற்றைப் பிடித்துக் கொணர்ந்திருக்க முடியும். இவ்வரிய செயலைச் செய்தமையா லன்றோ அக்கால மேன்மைத் தமிழ்ப் புலவர்கள் இவ்வேந்தனை 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' எனச் சிறப்பித்துக் கூறினர்.

**ஏற்றத்தை மறந்தது ஏன்?**

இத்தகைய ஏற்றமிகு செய்திகளை யெல்லாம் மறந்து விட்டு, ஆடென்றும், ஆவென்றும் மீட்டலென்றும் மேன்மை

விட்டுக் கூறியது ஏன்? உள்ளதை ஆய்ந்து உண்மையையே காட்டும் கழக இலக்கியக் கண் கொண்டு நோக்காமல், வட புலத்தினின்றும் இறக்குமதியான மடமிகு தொன்மக் (புராணக்) கண் கொண்டு நோக்கியதால்தான் பொருந்தாக கருத்துகள் எல்லாம் தமிழ் இலக்கியத்தில் புற்றீசல்களாய்க் கிளம்பின. புற்றீசல்களுக்கு வாழ்நாள் அதிகமில்லை என்றாலும், அவை மிகுதியாய்த் தோன்றுமாதலால், அவற்றை அகற்றுதல், நம் கடமையாகும். இக் கடமையாற்றின் தமிழால் வாழ்ந்து கொண்டே தமிழைப் பழிக்கும் தகவிலார்களின் பகைமையை மாய்த்துப் பயன் விளைக்கலாம்.

முடிவிடம்

"பெருமை யுடையவர் ஆற்றுவார் ஆற்றின், அருமை யுடைய செயல்" என்ற வள்ளுவத்திற்கு எடுத்துக் காட்டாய் வாழ்ந்து அருமையுடைய செயலைப் புரிந்தவன் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன். இது போன்றவற்றை மட்டுமின்றி, எதனையும் இயற்கை நெறி பிறழாது எடுத்துரைக்கும் கழக இலக்கியங்களைக் கசடறக் கற்று, மொழிக்கும், நாட்டிற்கும், முத்தமிழ் கொஞ்சும் வீட்டிற்கும் நற்பயன்களை விளைவிப் போமாக.

———

## ஒரே வெண்பாவில் 12 தமிழ் மாதங்கள்

[இன்னிசை வெண்பா]

*சித்திரைவை காசிஆனி சேர்ஆடி ஆவணிபின்*
*வைத்த புரட் டாசிஐப்ப சிகார்த்தி கையுடனே*
*மார்கழியும் தைமாசி பங்குனியும் பன்னிரண்டாய்ச்*
*சேர்தமிழ்மா தங்களாகும் செப்பு!*

## ஒரே வெண்பாவில் கிழமையின் ஏழு நாள்கள்

[இன்னிசை வெண்பா]

*ஞாயிறுதிங் கள்செவ்வாய் நல்லபுதன் பின்வியாழன்*
*போய்வெள்ளி யும்சனியும் பூவுலகில்—வாய்த்தவொரு*
*வாரத்தின் நாள்ஏழாய் வைத்துள்ளார்! முன்னோர்கள்*
*பாரெங்கும் இந்நாளே பார்!*

—வித்துவான் நெல்லை ஆ. கணபதி, பி.ஏ.

# வரவுக்குத் தகுந்தபடி செலவு செய்
## (ஓர் அறிவுரை)

மக்கள் கடனில்லாமல் வாழ்வதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. கடனில்லாமல் வாழும் வகை யிருக்கவும் கடன் சுமையினால் துன்புறுவானேன்? எவ்வளவு பயனுடைய முக்கிய மான செலவுகள் இருப்பினும் நம் வரவுக்கு மிஞ்சிய செலவினை ஒருபோதும் செய்யக்கூடாது. நமது வருவாய்க்கும் சொத்துக் கும் உரிய அளவிலேதான் செலவினைச் செய்தல் வேண்டும். நமது வரவுக்கு மேலே செலவு செய்யக்கூடிய வழி இருப்பினும் அவ்வாறு செலவு செய்யாமல் இருப்பதே நன்றாகும். நம்மிடம் இருக்கும் துணியின் அளவுக்கேற்பவே சட்டை தைக்க வேண்டும். டாக்டர் சான்சன் தம்முடைய நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில், "எவருக்கும் எந்த வகையிலும் நாம் கடனாளியாக இருத்தல் கூடாது.! ஏழையாக இருக்கக் கூடாது என்பதைக் கடைப்பிடி. நமக்கு எவ்வளவு சொத்து இருப்பினும் செலவினைக் குறைத்துக்கொள்" என்று குறிப்பிட்டுள்ளார்.

நாம் எந்தப் பொருளை வாங்கப் போனாலும், முதற்கண் மூன்று கேள்விகளை நமக்குள் நாமே கேட்டல் வேண்டும். (1) இது பயனுடைய பொருள்தானா? (2) இதற்குரிய விலை சரிதானா? (3) இந்தப் பொருள் இல்லாமல் நாம் வாழ முடியாதா?

இக் கேள்விகளால் நமக்குக் கிடைக்கப்பெறும் விடைகள் நமக்குப் பிடித்தமாயிருப்பின் அந்தப் பொருளை வாங்குவதற்குச் செல்லவும். புறத்தோற்றத்தைக் கண்டு மயங்கி, சிந்திக் காமலோ, விரைவாகவோ எதனையும் வாங்குவதற்குத் துணிதல் கூடாது. புறத்தோற்றங்கள் எப்போதும் நம்மை ஏமாற்றக் கூடியனவாகும்.

ஒருவர் தமக்குள்ள வருவாய் எவ்வளவு கூடுதலாகவோ, எவ்வளவு குறைவாகவோ இருப்பினும் அதனை நான்கு பங்குக ளாக்கி அவற்றில் இரண்டு பங்குகளை வீட்டுச் செலவுக்கு ஒதுக்குதலும், மற்றொரு பங்கை உடை, மருந்து, அறம் முதலிய செலவுகட்கு ஒதுக்குதலும், நான்காவது பங்கைப் பிற்காலத்தில் ஏற்படும் முதன்மையான செலவுகட்காகப் பாங்கிலோ, அஞ்சலகத்திலோ சேமித்து வைத்தலும் வேண்டும்.

கடைகளில் அல்லது உணவு விடுதிகளில் கடன் வைக்கக் கூடாது. கைப்பணத்தைக் கொண்டே கடைகளில் பொருள் வாங்குதலும், விடுதியில் உண்ணுதலும் வேண்டும்.

கணக்கேடு வைத்து நம் வரவு செலவுகளை நாள்தோறும் பதிந்து வருதல் மிகவும் இன்றியமையாத செயலாகும்.

அவ்வாறு கணக்கெழுதுவது தொடக்கத்தில் தொல்லையாக இருப்பினும், பின்னர் அதனால் ஏற்படும் நன்மைகள் பலவாகும். நாளடைவில் அது நமக்குத் தொல்லையாகத் தோன்றாது.

யாருக்காவது நாம் பணம் கொடுக்கவேண்டுமாயின் நாமே நேரிற் சென்று கொடுத்தல் வேண்டும். கூடுமானவரை நாம் நம் ஏவலாளர் வழி அனுப்பக் கூடாது. ஒரோவொருகால் நம் ஏவலாளர் வழி அனுப்ப நேருமாயின் அப் பணம் கொடுக்கப் பெற்ற செய்தியும் பின்னர் அப்பணம் நமக்கு வரவு வந்த செய்தியும் அறிந்து குறிப்பெழுதுதல் வேண்டும். அன்பளிப்பாக ஒன்றை ஒருவருக்கு வழங்குதலையும் பிறரிடம் ஒன்றைப் பெறுதலையும் கூடுமானவரை நீக்குதல் வேண்டும்.

குறிப்பு :

இக் குறிப்புகள் ஓர் ஆங்கிலப் புத்தகத்தின் 17, 18ஆம் பக்கங்களிற் காணப்பெறுகின்றன. நூற்பெயர் தெரியவில்லை. என் தமையனார் அவர்களின் தொகுப்புக்களில் இவ்விரண்டு பக்கங்களைக் கொண்ட அச்சுத்தாள் மட்டும் கிடைக்கப்பெற்றது.

"ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை."

குறள் - 478

—வ. சு.

---

## விழிப்புணர்ச்சி யூட்டிய டாக்டர் மு. வ.

[இரா. க. சுந்தரராசன், B.Sc. M.Ed., தூத்துக்குடி]

சங்கப் புலவர்களையடுத்து, மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, உ.வே. சா. மறைமலையடிகள், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப் பிள்ளை, நாவலர் சோமசுந்தர பாரதியார், வேங்கடசாமி நாட்டார், திரு. வி. க., உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை போன்ற பெரும் புலவர்கள் வரிசையில் வைத்தெண்ணத் தக்கவர் டாக்டர் மு. வ.

எல்லா நிலையிலிருப்பவரின் உள்ளத்திலும் வீற்றிருக்கு மளவிற்குப் பலதரப்பட்ட நூல்களை எழுதிய சிறப்பு டாக்டர் மு. வ.வுக் குரியதாகும்.

தம் நலத்தோடு பிறர் நலத்திற்கும் தம்மாலியன்ற உழைப்பை நல்க வேண்டுமென்ற கொள்கை உடையவர் டாக்டர் மு. வ.

## நல்லவழி காட்டும் நமக்கு

[பேராசிரியர், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், சென்னை]

முத்தமிழைக் காத்தளங்கள் முவரத ராசனுர்
இத்தலத்திற் பெற்றபுகழ்க்(கு) ஈடிலையவ்—உத்தமர்தம்
கல்வியுயர் பண்புநலம் கண்ட நெறிமுறைகள்
நல்லவழி காட்டும் நமக்கு.

## சுடர்விளக்கு அணைந்தது

[புலவர் திரு. கோ. இனியபெருமாள், துணைத்தலைவர்,
வடார்க்காடு மாவட்டத் தமிழாசிரியர் கழகம், ஆரணி.]

வேலமெனும் சிற்றூரில் மேலவனும் முனிசாமி
சீலமிகு சேயாகித் திகழ்மு.வ. செழும்புலவ !
காலனுனை வேண்டியதால் கடன்முடித்துச் சென்றனையே
ஓலமிடும் எம்போல்வார் உறுதுயரைக் காணாயே.

திருக்குறளின் பொருளுணரத் தெளிவுரையை வழங்கினையே
உருக்கமுடன் பலநூல்கள் ஓயாமல் எழுதினையே
பெருக்கத்துப் பணிவோடு பிறர்மதிக்க வாழ்ந்தனையே
தருக்கறியா நின்பிரிவு தாங்குவதற் கெளிதாமோ.

வண்புலவர் தமிழாய்ந்த மதுரைப்பல் கலைக்கழகக்
கண்போலத் துணைவேந்தர் கடமையினைப் புரிந்தனையே
பண்குலவு தமிழ்ச்சான்றோய் பழகுதமி ழமுதருந்தி
விண்குலவு புலவர்க்கு விருந்தாகி மறைந்தனையே.

அன்புமிகு தமிழ்த்தாயை அரியணையில் வைத்தாளும்
இன்பமிகு தமிழ்நாட்டில் ஏற்றமுற வாழ்ந்தனையே
என்புருகி நின்பிரிவால் எல்லோரும் ஏங்கியழத்
துன்பமொரு முடிவின்றித் தொடர்ந்தெங்கு படர்ந்தனையே.

பேர்வரத ராசனெனப் பேசுபுகழ் பெருந்தகையே
ஆர்வமிக உழைத்தமையால் அரும்பதவி பெற்றுயர்ந்தாய்
சோர்வின்றி ஒளிவீசும் சுடர்விளக்கே அணைந்தனையே
யார்வந்து நின்னிடத்தை இனிநிரப்ப வல்லாரே

———

# நெருப்பு நினைவுகள்

[மா. நவநீதகிருட்டிணன்,

தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக்கழகம்]

நீலக் கடல்வற்றி நிலவெடிப்பாய்ப் பிளந்ததுபோல்
ஓலப் பேரிடிகள் ஒருநூறு விழுந்ததுபோல்

கோலத் தமிழ்க்குயிலார் குரல்ஒடுங்கி நடுங்கிநிற்பச்
சீலத் தமிழ்ச்செல்வர் திருமு.வ. கலங்கவைத்தார்

மலையொன்று சாய்ந்திங்கு மண்குவிய லாகிடுமோ
சிலைபோலக் கிடக்கின்றான் சிந்தனையின் முதற்குழந்தை

வானத்து மேகத்தை வளர்நெருப்பில் வாட்டுவரோ
கானத்துக் குயில்ஐயோ ! கழுத்தொடித்துத் திருகுவரோ?

அஞ்சுகத்தின் சிறகை அனலெரிய விடலாமோ ?
கஞ்சமல ரிதழைக் கனலிடையே இடலாமோ

கோபுரங்கள் இங்கிருக்கக் குலவுபுரு சென்றதெங்கே?
நூபுரங்கள் இங்கிருக்க நுண்பரல்தான் போனதெங்கே?

கூடுடைந்து சிதைந்திருக்கக் குஞ்சொன்று சென்றதெங்கே?
நீடுமணல் மூச்செரிய நீர்வெள்ளம் போனதெங்கே?

வெளிவானம் இங்கிருக்க வெண்ணிலவு சென்றதெங்கே?
ஒளியின்றி விளக்கிருக்க ஒருசுடர்தான் போனதெங்கே?

மின்னல் பெற்றது அவன் சிரிப்பை
மீன்கள் பெற்றது விழி ஒளியைக்
கன்னல் பெற்றது அவன் தமிழை
கதிரொளி பெற்றன சிந்தனையைச்
செந்நெல் பெற்றது அவன் பணிவைச்
சிற்றெறும் புற்றது சுறுசுறுப்பைத்
தண்மணல் பெற்றது அவனுரையைத்
தளிர்கள் பெற்றன அவன்மென்மை

———

# மு. வ. ஒரு மருத்துவர்

[எஸ். பாக்கியம், M.Sc. M.Ed.,

தூத்துக்குடி]

தம் நுண்மாண் நுழைபுலத்தால் இலக்கியத்தில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தப் புதிய நடையை உருவாக்கிய பெருமை டாக்டர் மு. வ. அவர்களையே சாரும் என்றால் மிகையாகாது.

அப் பெருமகனார் கதைகள் கட்டுரைகள் வழி இளைஞர் உலகத்தைக் கவர்ந்த ஆற்றலைப்பெற்றவர். கருமாணிக்கத்தின் 'அந்த நாள்' 'கரித்துண்டு' மறப்பவர் எவருளர் ?

ஆசிரியர்களிடம் அவர் காட்டிய கனிவும், கடமையுணர்ச்சியும், செயற்றிறனும் மறக்கற்பாலனவல்ல.

எல்லாவற்றுக்கும் மேலாகக் காலத்தைக் கண்ணெனக் காத்திட்ட ''கடமை வீர''ரென்பதையும், பற்பலபொழுதில், நேரிற் கண்டுள்ள பல நிகழ்ச்சிகள் என்னெஞ்சைவிட்டு நீங்காதனவாகும்.

அவர், ''கல்வி'' என்ற நூலில் கல் பற்றிய வரையறைகளை விளக்கிக் கற்றவர்களையும் கலக்கும் கல்விக் கோட்பாடுகளைக் கொட்டித் தீர்த்துத் தம் திறமையைக் காட்டுதற்கு இதுவுமொரு வழி என்றெண்ணும் பல கல்வியாளர்களைப்போலன்றி, நம் மக்கள் கூட்டத்தின் அமைப்பு. பொருளாதார நிலை, இன்றைய மக்களின் கல்வியறிவு, ஆசிரியர்களிடம் உள்ள குறை, நிறை தற்காலத் தேர்வு முறை, அதிலுள்ள சீர்கேடுகள் முதலிய வற்றைத் திடீரெனப் பிளந்த தென்னம்பாளையிலுள்ள வெண்ணிறப் பூக்களைப்போல அழகுபடக் காட்டியிருப்பதைக் கண்டு, அந்நூலைக் கற்றோர் அவருள்ளத்தைப் பாராட்டா திருப்பாரோ !

பல்கலைக் கழகத்துடன் தொடர்புடையவனென்ற வகையால் யானறிந்தவளவில் டாக்டர் மு. வ. கல்வியாளர் மட்டுமல்லர்; சீர்திருத்தக்காரர் மட்டுமல்லர்; நிதானமான சீர்கெட்டதை மாற்றும் மருத்துவர்தாம்.

———

## கலைமேதை மு. வ.

[மின்னூர் சீனிவாசன், மாநிலக் கல்லூரி, சென்னை.]

கரித்துண்டே போதும் என்று
கலைதந்த வள்ளல்! நெஞ்சில்
வரித்தது தமிழே என்ற
வாழ்வுக்கோர் சான்றும்! அன்பு
சிரித்திடும் உதடு பூத்த
சிந்தனை முகமாம்! அன்னார்
விரித்திடும் விளக்க மெல்லாம்
வீழாது நிற்கும் என்றும்!

ஓவியம் முதலாய் மேலை
உயரறிவாளர் நூலும்
மேவியே அறிந்த மேதை
மென்மையில் பூங்காற்றூனர்!
தேவரின் குறளுக் கீந்த
தெளிவுரை வென்று நின்று
யாவரும் வணங்க வைத்த
இணையிலா உழைப்பே போற்றி!

பெண்மையை மதிக்கும் மாண்பு,
பேருல கெல்லாம் ஈசன்
உண்மையாய் இய்ற்கை யாகி
உள்ளன்என்று நம்பும் வாழ்வு,
கண்ணிகர் தமிழின் ஆக்கம்
கருதிய மேன்மை யெல்லாம்
வண்மையாய் வரத ராசர்
வடிவினில் கண்டோ மையா!

தயிர்க்குடம் தன்னை நோக்கித்
தகாச்சிறு பையன் கல்லை,
செயலறி யாமல் எய்த
சிறுமைபோல் மு வ. என்னும்
உயிர்க்குடம் தமிழ் நிறைந்தே
உறைகுடம் இலக்காய் வந்த
மயல்நிறை கால னுக்கே
மதியில்லை என்ப துண்மை!

——·——

## ‘இந்து’ நாளிதழ் வெளியீட்டாளர்

# திரு. கஸ்தூரி கோபாலன் மறைவு

ஆங்கில நாளிதழான ‘இந்து’ இதழின் வெளியீட்டாளரும் கஸ்தூரி ரங்க ஐயங்காரின் இரண்டாவது மகனுருமான கஸ்தூரி கோபாலன் அவர்கள் 8—12—’74 ஞாயிற்றுக் கிழமையன்று தமது 84ஆவது அகவையில் சென்னையில் காலமானுர் என்ற செய்தியறிந்து வருந்துகின்ருேம். இவர், தம் தந்தையார் வழியிலும் பின்பு தம் தமையனுர் கஸ்தூரி சீனிவாசன் வழியிலும் நின்று, இந்து இதழைத் தமிழகத்தில் மட்டுமின்றி உலக மக்கள் அனைவரும் விரும்பிப் படிக்கும் சிறந்ததொரு செய்தித் தாளாக நடத்தி வந்தார்கள். கடந்த 60 ஆண்டுகளாகச் செய்தித் துறை முதல் ஆட்சித் துறை வரை பொறுப்பேற்று நடத்தினுர். ‘இந்து’ இதழின் கடைசிப் பக்கத்தில் சமயச் சொற்பொழிவுகளிலிருந்து சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வகையில் சமயக் கருத்துகளைத் தவருமல் வெளியிட்டு வந்தார். மற்றும் போட்டிப் பந்தய விளையாட்டுப் பகுதியினைப் (Sports column) பதிப்பித்து வந்தவரும் இவரே.



கஸ்தூரி ஐயங்கார் காலத்திலிருந்து அவர்தம் வழிமுறை தவருது ‘இந்து’ இதழ் சிறப்புற நடத்தப் பெற்று வருவது குறிப்பிடத் தக்கதாகும். இவ்விதழ் தரமான செய்திகளைத் தக்க ஆதாரங்களோடு பதிப்பித்து வருகின்றது. செய்திகளின் உண்மை நிலை அறிய விழைவோர் ‘இந்து’ இதழையே நாடுதல் இதற்குத் தக்கதோர் எடுத்துக் காட்டாகும். இவ்விதழ் பத்திரிகை உலகில் மிகப் பெரிய, நிலையான இதழாக விளங்கி வருகின்றது. உலகெங்கும் கிளை நிலையங்களைக் கொண்டது இவ்விதழ். செய்திகளை விரைவில் பரப்புதற்கென, இதழ்களைக் கொண்டு செல்ல வான ஊர்தி ஒன்றும் சொந்தத்தில் வாங்கியுள்ளனர். செய்தி யனுப்புநரும், எழுத்தாளரும் அச்சுத்தொழிலாளரும், விற்பனை யாளருமாக ஆயிரக் கணக்கானவர் ‘இந்து’ இதழால் வாழ்கின்றனர்.

இத்தகைய ஆற்றல்மிக்க ஓர் இதழாளரின் (Journalist) மறைவு இதழுலகிற்கு ஈடு செய்ய இயலாததொரு பெரு நட்டமாகும். மறைந்த கஸ்தூரி கோபாலன் அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவிக்கின்ருேம்

# செய்திகளும் குறிப்புகளும்

## பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கட்குச் சாகித்திய அகாடமி விருது

இந்த ஆண்டில் 17 இந்திய மொழிகளைச் சேர்ந்த 17 நூல்களுக்குச் சாகித்திய அகாடமி விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.



பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் எழுதிய "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் தமிழ் நூலுக்கு 1974ஆம் ஆண்டிற்குரிய சாகித்திய அகாடமி விருது (ரூ.5,000) கிடைத்துள்ளது. விருது பெற்ற பேராசிரியர் அவர்கட்கு எம் வாழ்த்துகள் உரித்தாகும்.

பேராசிரியர் அவர்கள் சென்னைத் தியாகராயர் கல்லூரித் தமிழ் மன்றத்தில் தொடர்ந்து 15 திருக்குறள் ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி 'திருக்குறள் மணி' என்னும் பட்டமும் பெற்றுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

## டாக்டர் மு. வ. தமிழ்க் கல்லூரி

10—10—74இல் இராயபுரம் தேசிய நடுநிலைப் பள்ளியில் பேராசிரியர் ¡ம. இராசமாணிக்கம் எம். ஏ. அவர்கள் தலைமையில் சிலம்பொலி செல்லப்பன் எம். ஏ பி. டி. அவர்கள் வடசென்னைத் தமிழ்க் கல்லூரியினைத் தொடங்கி வைத்தார்கள். அக் கல்லூரி டாக்டர் மு. வ. அவர்கள் நினைவாக டாக்டர் மு. வ. தமிழ்க் கல்லூரி எனப் பெயர் சூட்டப் பெற்றுள்ளது.

## சேதுப்பிள்ளை செந்தமிழ்ச் சங்க இரண்டாம் ஆண்டுவிழா

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் நினைவாக நடைபெற்று வரும் செந்தமிழ்ச் சங்கத்தின் இரண்டாம் ஆண்டுவிழா 9-11-74இல் சென்னை இராயப்பேட்டை ஒப். எம். சி. ஏ கலை அரங்கில் உயர்நீதி மன்ற நடுவர் மாண்புமிகு எஸ். மகராஜன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் க. இராசாராம் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர். பேராசிரியர் திரு. சா. அமீது வரவேற்புரை நிகழ்த்தினர். சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம், டாக்டர் சு. சங்கரராசு ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

## திரு. ரா. விசுவநாதையர் மறைவுக்கு இரங்கல்

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையக் காப்பாளர் பேராசிரியர் ரா. விசுவநாதையர், எம். ஏ., பி. ஓ. எல்., எல். டி. அவர்களின் மறைவு குறித்து 28-11-74இல் உ. வே. சா. நூல்நிலையத்தில் உயர்நீதிமன்ற நடுவர் மாண்புமிகு மு. மு. இஸ்மாயில் அவர்கள் தலைமை

யில் ஓர் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. நடுவர் அவர்கள் திரு. விசுவநாதையர் படத்தைத் திறந்து வைத்து உரையாற்றினர். அன்பர்கள் பலர் இரங்கல் உரை வழங்கினர்.

## அருள்மிகு தண்டபாணி அடிகளின் 136ஆவது பிறந்தநாள் விழா

சென்னைக் கந்தகோட்டம் கந்தசாமி கோயிலில் வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகளின் 136ஆவது பிறந்தநாள் விழா 8-12 74இல் நடைபெற்றது. இதனையொட்டித் திரு. ப. ந. கலியாண சுந்தரம் குழுவினரால் தேவார, திருப்புகழ் இன்னிசையும், தண்டபாணி அடிகளுக்கு மலர் அலங்காரமும் வழிபாடும், பின்னர்ச் சுப்பு ஆறுமுகம் குழுவினரால் 'வள்ளலார் வந்தார்' எனும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியும் நடைபெற்றன.

## நெல்லையில் தவத்திரு தண்டபாணி அடிகள் விழா

நெல்லை இலக்கிய வட்டத்தின் சார்பில் நெல்லையில் முருகனருளால் தோன்றிய வண்ணச் சரபம் தவத்திரு தண்டபாணி அடிகள் விழா, தருமைபருள் பெறு அருணகிரி இசைக் கழகம், தருமை ஆதீன மடத்தில் 8-12 74இல் சிறப்புற நடைபெற்றது. தவத்திரு தி. செ. முருகதாச அடிகள் சிறப்புரை ஆற்றினர். 'தவத்திரு தண்டபாணி அடிகள்' என்னும் பொருள்பற்றி கருத்தரங்கு நடைபெற்றது. அறிஞர்கள் பலர் கருத்துரையாற்றினர்.

## "இலக்கிய ஒப்பாய்வு" வெளியீட்டு விழா

தமிழ்ப் பண்பாட்டு மன்றத்தின் சிறப்பு வெளியீடான "இலக்கிய ஒப்பாய்வு" (Studies in Comparative Literature) நூல் வெளியீட்டு விழா, சென்னை மாவட்ட மைய நூலகக் கருத்தரங்கில், சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள் தலைமையில் 5-12-74 இல் நடைபெற்றது. இராமலிங்கா மிஷன் தலைவர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் நூலை வெளியிட்டார். திரு. மு. அருணாசலம், எம். ஏ. சிறப்புரை ஆற்றினர்.

## "கா. சு. பிள்ளை" நினைவு இலக்கியப் பத்தாவது ஆண்டுவிழா

குளித்தலை அறிஞர் இளமுருகு பொற்செல்வி அவர்கள் நன் முயற்சியினால் தமிழ்ப் பெருமகனார் திரு. கா. சு. பிள்ளை அவர்களின் நினைவாக இயங்கும் கழகத்தின் பத்தாவது ஆண்டுவிழா, குளித்தலை காவிரி நகர் அறிஞர் அண்ணா திருமண மண்டபத்தில், மாண்புமிகு அமைச்சர் அன்பில் தருமலிங்கம் அவர்கள் தலைமையில் 9-11-74 மாலை தொடங்கிச் சிறப்பாக நடைபெற்றது.

## திருவள்ளுவர் சிலை கண்டெடுக்கப்பட்டது

மயிலாப்பூர் திருவள்ளுவர் கோயில் புதுப்பிக்கப்பட்டு வருவதை அன்பர்கள் அறிவர். இப் பணிக்கெனக் கடைக்கால் தோண்டப் பட்ட போது 3-12-74இல் நான்கடி ஆழத்தில் திருவள்ளுவர் சிலையொன்று கண்டெடுக்கப்பட்டது. இச் சிலையின் தலை, இடக்கை ஆகியன சிதைந்து காணப்பட்ட போதிலும், தற்போது மயிலாப்பூர் கோவிலி

லுள்ள வள்ளுவர் சிலையை ஒத்து, தாடி மீசைகளுடன் அமர்ந்த நிலையில் சிலையின் இடக்கையில் ஓலைச் சுவடியும் வலக்கை சின் முத்திரையுடனும் காணப்படுகின்றது.

இச் சிலை 14 அல்லது 15ஆவது நூற்றாண்டில் திருவள்ளுவரின் உருவைக் குறிப்பதாக உள்ளது என்று அகழ்வாராய்ச்சித் துறை இயக்குநர் திரு. ஆர். நாகசாமி ஆய்ந்து கூறுகிறார். தற்போது இச் சிலை மாதவப்பெருமாள் கோயிலில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. வள்ளுவரைப் பற்றிய இத்தகைய அகழ்வாராய்ச்சியினை அரசு தொடர்ந்து செய்தல் பயனுடைத்தாகும்.

## பொற்கிழிக் கவிஞருக்குப் பாராட்டு விழா

மதுரை மீனாட்சி அம்மன் கோவில் காவியப் போட்டியில் 'பாண்டிமாதேவி' என்னும் காவியம் புனைந்து முதற் பரிசாக ரூ 1001 பொற்கிழியினைத் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞரிடமிருந்து பெற்ற கவிஞர் அரு. சோமசுந்தரன், எம் ஏ., பி. டி. அவர்களைப் பாராட்டவும், "பாண்டிமாதேவி" நூலினை வெளியிடுதற்குமான விழா மாண்புமிகு நடுவர் கிருட்டிணசாமி ரெட்டியார் தலைமையில் 21-11-74இல் சென்னை மத்திய நூலகக் கட்டடத்தில் நடைபெற்றது. இராசா சர் முத்தையாச் செட்டியார் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினார் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. 'பாண்டிமா தேவி' என்னும் நூலினை வெளியிட்டனர்.

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி ஏழாவது ஆண்டு விழா

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் நடைபெற்று வரும் திருநெல்வேலி குமர குருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் ஏழாம் ஆண்டுவிழா திருநெல்வேலிக் கூட்டுத் துணை நடுவர் திரு. தே. பே. சு. பழனிச்சாமி, பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில் 1-12-74இல் நெல்லையில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.

திருவாட்டி கே. ராஜம், பி. எசி., பி. எட். மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார். விழாவினையொட்டிக் கதம்ப நிகழ்ச்சிகளும், ஓரங்க நாடகமும் நடைபெற்றன.

## தருமை யருள்பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகம்

இக் கழகத்தின் சார்பில் நெல்லைச் சந்திப்புத் தருமபுர ஆதின மடத்தில் 1-12-74 முதல் 2-3-75 முடிய ஞாயிறுதோறும் மாலை 6-30 மணியளவில் வேலும் வில்லும் என்னும் தலைப்பில் 14 சொற்பொழிவுகள் நடைபெறும். இது மிகவும் போற்றுதற்குரிய சீரிய முயற்சியாகும்.

## கலைஞர்கள் மறைவுக்கு வருந்துகிறோம்

கடந்த அக்டோபர்த் திங்கள் 17ஆம் நாள் புகழ்பெற்ற இசைக் கலைஞர் பத்மபூசண் செம்பை வைத்தியநாத பாகவதர் அவர்கள்

ஒட்டப்பாலத்தில், தமது 80ஆவது அகவையில் காலமானார் என்ற செய்தி அறிந்து வருந்துகிறோம்.

19-10-74இல் புகழ் பெற்ற நாடக நடிகரும் 'நாடகத் தந்தை' என்று அழைக்கப்படுபவருமான நவாப் இராசமாணிக்கம் தமது 74ஆவது அகவையில் தஞ்சை மருத்துவமனையில் காலமானார் என்ற செய்தி யறிந்து பெரிதும் வருந்துகிறோம். அவர்தம் குடும்பத்தார்க்கு நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

புகழ்பெற்ற எழுத்தாளரும், நாட்டு விடுதலைப் போரில் பங்கு கொண்டவரும், 'மஞ்சரி' இதழின் ஆசிரியருமான திரு. தி. ஜ. ரங்கநாதன் அவர்கள் 20-10-74இல் காலமான செய்தி பெரிதும் வருத்தந் தருவதாகும்.

## களவாடப்பட்ட கோயிற்சிலை மீட்கப்பெற்றது

தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடியை அடுத்துள்ள பெருகவாழ்ந்தான் என்னுஞ் சிற்றூர்ச் சிவன் கோவில் ஒன்றிலிருந்து களவாடப்பட்ட ஐம்பொன்னாலாகிய அம்மன் சிலையொன்று கடந்த 4-12-74இல் சென்னை மைய புகைவண்டி நிலையத்தில் காவல் துறையினரால் கைப்பற்றப்பட்டது. இதனைக் களவாடியவர் பம்பாய்க்குச் செல்லும் ஒரு பயணியாவார். இச் சிலையின் மதிப்பு மூன்று நூறாயிரம் வெண்பொற் காசுகளாகும். தமிழகத்திலிருந்து வெளிநாட்டிற்குக் கடத்தப்படுதற்கென இச் சிலை திருடப்பட்டதாகத் தெரிகிறது.

## 'அனிச்ச அடி' நாடக ஆய்வரங்கம்

திருநெல்வேலித் தனித்தமிழ் இலக்கியக் கழகத்தின் சார்பில் 3-11-74இல்,பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரிக் கலையரங்கில் புலவர் ஆ. பழநி அவர்கள் இயற்றிய 'அனிச்ச அடி' நாடகம் பற்றிய ஆய்வரங்கம் பேராசிரியர் கா. மாயாண்டி பாரதி எம் ஏ. பி. ஓ. எல். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு பா. வளனரசு எம். ஏ. வரவேற்புரை ஆற்றினார். கவியரசு முடியரசன் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினா 'அனிச்ச அடி'' பற்றிப் பல அறிஞர்கள் ஆய்வுரை நிகழ்த்தினர். நூலாசிரியருக்கு இலக்கியக் கழகத்தின் சார்பில் 'பாவலர் மணி' என்ற பட்டம் வழங்கப்பட்டது.

## கலை மாமணிக்குப் பாராட்டு

தமிழ்நாடு, இயல், இசை, நாடக மன்றத்தார் 'கலைமாமணி விருது' வழங்கத் திருமுறைவாணர் தருமபுரம் பி சுவாமிநாதன் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கு 15—11—74இல் திருநெல்வேலி மாவட்டத் தெய்விகப் பேரவையின் சார்பில், குமாரசாமி கோவிலில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. பேரவைத் தலைவர் கவிஞர் மு. சு. சங்கர் பாராட்டுரை வழங்கினார்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்காக சென்னை-600001, 2-140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**அராபிக் கதைகள்**

—பேராசிரியர் தி. செல்வக் கேசவராய முதலியார், எம்.ஏ.

இதில் அலிபாபாவும் நாற்பது திருடரும், கோஜியா அசேன் அல்லாபால், அபான் அசேன் என்னும் மூன்று கதைகள் அடங்கியுள்ளன. கதைகள் விறுவிறுப்பான நடையில் சுவைபட எழுதப்பட்டுள்ளன. எல்லாரும் படித்து இன்புறத்தக்க இனிய கதைகள். ரூ. 3 25

**இணைப் பழமொழிகள் அகரவரிசை (Parallel Proverbs)**

—(தமிழ் - ஆங்கிலம், ஆங்கிலம் - தமிழ்)

பேராசிரியர் தி. செல்வக் கேசவராய முதலியார், எம்.ஏ.

தமிழில் வழங்கும் பழமொழிகளுக்கு நேரிணையான ஆங்கிலப் பழமொழிகளும், ஆங்கிலப் பழமொழிகளுக்கு இணையான தமிழ்ப் பழமொழிகளும் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. கட்டுரையாளர், நூலாசிரியர், பேச்சாளர், மாணவர்கள் ஆகியோருக்கு இந்நூல் பெரிதும் பயன்படும். நூலகங்களிலும் இருக்க வேண்டிய அகரவரிசை நூல். ரூ. 12 50

**கோள்களின் கதை**

—பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன், பி.எசி., எம்.ஏ.

வானத்தில் சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி ஆகிய கோள்களின் இயக்கம் பற்றியும் ஞாயிற்று மண்டலத்தைப் பற்றியும் சிறுவர்கள் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் படங்களுடன் வெளிவந்துள்ள அழகிய நூல் ரூ. 2 25

**அம்புலிப் பாட்டுப் பாடாதே**

—கவிஞர் புத்தனேரி இரா. சுப்பிரமணியம்

அம்புலியை நம்புவிக்கு அழைக்கும் காலம் மாறி, மனிதன் அம்புலிக்குச் செல்லும் காலம் வந்தது பற்றியும் வேறுபல இயற்கைக் காட்சிகள் பற்றியும் எழுதப்பட்டுள்ள இக்கவிதைத் தொகுப்பு சிறுவர்கள் படித்து ஆடிப்பாடி மகிழப் பெரிதும் பயன்படும். படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. ரூ. 2 50

## புலவர் இரா. இளங்குமரன் எழுதியவை

**தமிழ்நாட்டுப் பழங்கதைகள் (முதற் புத்தகம்)**

சிறுவர் உள்ளங்களைத் திருத்தவும், பொழுது போக்காகப் படிக்கவும் பயன்படும், பல்சுவை உடைய இருபது கதைகளின் தொகுப்பே இந்நூல். ரூ. 2 25

**பாரதியார் பாடல் திரட்டு**

இதில் பாரதியார் பாடல்களுள், சுவையும் பயனுமிக்கனவும் சிறுவர் சிந்தைக்கு விருந்தளிப்பனவுமானபலபாடல்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பள்ளிநூலகங்களில் இடம்பெற்று மாணவர்க்குப் பயன்பட வேண்டிய அரியநூல். அழகிய பதிப்பு. ரூ. 1 80

**தனிப்பாடல் இன்சுவைத் திரட்டு**

தனிப் பாடல்களின் சுவையினைச் சிறுவரும் படித்து மகிழும் வண்ணமும், அறிவு பெறும் வண்ணமும் நல்ல பாடல்கள் பல விளக்கக் குறிப்புடன் தொகுக்கப் பெற்றுள்ளன. ரூ. 2 00

**கல்வியும் செல்வமும் (கட்டுரை நூல்)**

கல்விச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் தேடும் முயற்சியில் சிறுவர்க்கு ஊக்கமூட்டும் வண்ணம் எழுதப்பட்டுள்ள கட்டுரைத் தொகுப்பு நூல் ரூ. 2 25

